



உற்சாகமூந்த கதையுடன் திணறச் செய்யும் தீரச் - செயல்களும்.

உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் சம்பவங்களும் நிறைந்தது இப்படம்.

முழுவதும் ஒரே ஹாஸ்யமும் சாகஸமும், காதலும், வீரமும்தான்.

அபூர்வமான வசனங்களுடன் மகோன்னதமாகத் தயாரிக்கப்பட்டு.

விசேஷமான டைரக்ஷனில் திறமையுடன் நடிக்கப்பட்டு. ..



எல்லோருக்கும் உகந்த உல்லாசம் தரும் உன்னதச்



சித்திரமாகத் திகழுகிறது ............ ............

# ஜூபிடரின்

# மோகினி

## தீபாவளி தினத்தன்று



ராஜதானி முழுவதும் வெளிவருகிறது



# நற்செய்தி!

## தியேட்டர் சொந்தக்காரர்களுக்கு

# Bauer

## "பவர்"

### மிகச் சிறந்த நவீன ப்ரொஜக்டர்கள் வந்துள்ளன

முக்கியமான புதிய விஞ்ஞான அபிவிருத்திகள் புகுத்தப்பட்டுள்ளன. எளிமையும் உறுதியும் வாய்ந்தவை. இவைகளிலிருந்து ஒன்றும் நழுவவில்லை. உங்களுக்கே நன்றாகத் தெரியும் 'பவரை'ப் பற்றி!




போன் : 86282    தந்தி : "SOUNDHEAD"

சுலபமான தவணைகள்
எங்களைக் கேட்கவும்

## இண்டர்நேஷனல் டாக்கி எக்விப்மெண்ட் கோ, லி-ட்.

18, மவுண்ட் ரோடு, சென்னை

| தலைமை ஆபீஸ் : | கிளைகள் : | | |
|---|---|---|---|
| பம்பாய் : | லண்டன் : | டெல்லி : | நியூ யார்க் : |
| 17, க்வீன்ஸ் ரோடு, பம்பாய் - 4 | 21, ஓர்ம்வுட் தெரு லண்டன், இ.ஸி. 2 | சந்தனி சௌக் டெல்லி | 57, வில்லியம் தெரு நியூயார்க் - 5 |

ஆஹா!
என்ன
பிரகாசமான
அறை இது!

"ஆமாம். நான் வர்
ணம் வரவழைத்த
போது பிராண்டை
குறிப்பாக சொல்லி
யனுப்பினேன்"

SPK 40 TM

# ஷாலிமார் பெயிண்ட்

என்று அடித்தாற்போல்
சொல்லுங்கள்.

**46** YEARS OF MANUFACTURING EXPERIENCE




Shalimar Paint, Colour & Varnish Co., Ltd., POST BOX 136, MADRAS-1.

# இனிமையான பொழுதுபோக்கு

AVM புரொடக்ஷன்ஸ்

# வேதாள உலகம்

முழுவதும் சங்கீதமும் நாட்டியமும் நிறைந்தது

...இப்பொழுது நடைபெறுகிறது...

சென்னை...பாரகன் & பிரபாத்
மதுரை..................சென்ட்ரல்
திருச்சி..................ராஜா
கோயம்புத்தூர்....கர்னாடிக்
பெங்களூர்...சாகர், சிவாஜி & லக்ஷ்மி

மற்றும்

சேலம், ஈரோடு, கும்பகோணம், மாயவரம், தஞ்சாவூர், வேலூர், கடலூர், புதுச்சேரி, திருநெல்வேலி, தூத்துக்குடி, காரைக்குடி, திருவனந்தபுரம், நாகர்கோயில், திருச்சூர், கொல்லம் மைசூர், கோலார்தங்கவயல் கொழும்பு, யாழ்ப்பாணம்

*

அதிவிரைவில் எதிர்பாருங்கள்!

விருதுநகர் -

AVM PRODUCTIONS

இப்படத்தின் பாடல்களை கொலம்பியா ரிகார்டுகளில் கேட்கவும்

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 8 இதழ் 13 | அக்டோபர் 24 | சர்வதாரி ஐப்பசி 8



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

நேதாஜி சுபாஷ்போஸ் வெளிநாட்டில் ஆரம்பித்த இந்திய சுதந்திர யுத்தத்தில் கலந்துகொண்டு அவருக்குப் பக்க பலமாகத் தொண்டாற்றக் கூடிய பாக்கியம் பர்மாவிலும் இந்தோ சீனாவிலும் மலாயாவிலும் வாழ்ந்த தமிழ் மக்களில் பலருக்குக் கிடைத்தது. அவர்களுக்குள்ளே மேஜர் ஜெனரல் அழகப்பாவை அவசியம் குறிப்பிட்டாக வேண்டும்.

ஸ்ரீ அழகப்பா, நேதாஜி அமைத்த இந்திய சுதந்திர சர்க்காரில் சப்ளை இலாக்கா மந்திரியாக இருந்தார். நேதாஜியின் வீர மிக்க பிரசங்கங்களைத் தமிழில் மொழிபெயர்த்துச் சொல்லவும், பொதுவாக அவருடைய லட்சியத்தை அங்குள்ள பெரும்பான்மையான தமிழ் மக்களுக்கு எடுத்துக் கூறவும் ஸ்ரீ அழகப்பா செய்த தொண்டு கொஞ்ச நஞ்சம் அல்ல.




இவ்விதம் நேதாஜி போஸின் இந்திய சுதந்திர இயக்கத்தில் முக்கியஸ்தராக விளங்கிய ஸ்ரீ அழகப்பா சென்னையிலே நிம்மதியாக ஓய்வு பெற்றுக் கொண்டிருப்பதை நம்முடைய சுதந்திர இந்திய சர்க்கார் சும்மா பார்த்துக் கொண்டிருப்பார்களா?

''புறப்படுங்கள், இப்போதே இந்தோனேஷியாவுக்கு!'' என்று அவரை இந்தோனேஷியாவுக்கு இந்திய ஸ்தானிகராக அனுப்பி வைத்திருக்கிறார்கள்.

மேஜர் ஜெனரல் அழகப்ப முதலியார் எப். ஆர். ஸி. எஸ்., அவர்கள் ஐ. எம். எஸ். என்று சொல்லப்படும் இந்திய சர்க்கார் வைத்திய இலாகாவிலே பல வருஷ காலம் தொண்டாற்றியவர். சென்ற மகா யுத்தம் நடந்தபோது பிரிட்டிஷ் சைனியத்தில் சேர்ந்து மலாய் நாட்டுக்குச் சென்றார். அங்கே ஜப்பானுடைய தாற்காலிக வெற்றிக்குப் பிறகு நேதாஜி சுபாஷ் போஸின் தலைமையில் அமைக்கப்பட்ட இந்திய தேசிய ராணுவத்தில் சேர்ந்தார். 1945-ம் வருஷக் கடைசியில் ஸ்ரீ அழகப்பாவும் வேறு பல ஐ. என். ஏ. வீரர்களும் டில்லி செங்கோட்டையில் சிறை வைக்கப்பட்டுப் பிறகு விடுதலையானது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும்.

மேஜர் ஜெனரல் அழகப்பா இந்திய ஸ்தானிகராக இந்தோனேஷியாவுக்குப் போவதிலே ஒரு விசேஷம் இருக்கிறது.

ராஜ ராஜ சோழன் காலத்திலும் ராஜேந்திர சோழன் காலத்திலும் சோழ சாம்ராஜ்யம் விரிந்து பரந்து கடல்களுக்கப்பாலும் வியாபித்திருந்தது. சாவகம், புஷ்பகம் என்று அந்தக் காலத்திலே புகழ்ந்து கூறப்பட்ட இந்த இந்தோனேஷியா நாடு அப்போது தமிழ் மன்னர்களுடைய ஆதிக்கியத்திற்கு உட்பட்டிருந்தது. தமிழ்க் கலையும், பண்பும், நாகரிகமும் அங்கே எவ்வளவு தூரம் வியாபித்திருந்தது என்பதை இன்றைக்கும் காணலாம்.

இத்தகைய நாட்டுக்கு மேஜர் ஜெனரல் அழகப்பா இந்திய ஸ்தானிகராக நியமிக்கப்பட்டிருப்பது தமிழ்நாட்டுக்குப் பெருமையாகும். ஸ்ரீ அழகப்பாவையும் அவரை இந்தப் பதவிக்குப் பொறுக்கியெடுத்த இந்திய சர்க்காரையும் பாராட்டுகிறோம்.

# யார் உயரம்?




காங்கிரஸ் மகாசபையின் அக்கிராசனர் பதவிக்கு நாளது அக்டோபர் 24உ தேர்தல் நடைபெறுகிறது. டாக்டர் பட்டாபி சீதாராமய்யாவும் ஸ்ரீ புருஷோத்தமதாஸ் தாண்டனும் போட்டி யிடுகிறார்கள்.




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 13

# என்ன சேதி?

## சபலம் விடவில்லை!

இந்திய நாட்டிலிருந்து வெளியேறுவதற்கான பூர்வாங்க அலுவல்களைப் பிரஞ்சு சர்க்கார் ஆரம்பித்து விட்டார்களாயினும், வெளியேறாமல் இருந்து பார்ப்போமே என்ற சபலம் மாத்திரம் அவர்களை விடவில்லை என்று தோன்றுகிறது. இல்லாவிடில் அவர்கள் இன்னும் ஏன் அடக்குமுறையில் இறங்க வேண்டும்? காரைக்கால் தேசிய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ என். ஸ்ரீகாந்த ராமானுஜம் அவர்களைப் பிரஞ்சு சர்க்கார் கைது செய்யவில்லையென்றாலும், அவர்மீது வழக்குத் தொடர்ந்திருக்கிறார்கள்.

மற்றும் புதுச்சேரி, காரைக்கால் முதலிய இடங்களில் சென்ற பத்தாந் தேதி முனிசிபல் தேர்தல்களை நடத்துவதென்று திட்டம் போட்டிருந்தார்கள். மேற்படி தேர்தல்கள் சரிவர நடைபெற ஏதுவில்லையாதலால், அவற்றை ஒத்திப் போட வேண்டுமென்றும் பிறகு இந்திய சர்க்கார் கவனிப்பாளர்களின் முன்னிலையில் அவை நடைபெற வேண்டுமென்றும் பிரஞ்சு இந்திய காங்கிரஸ்வாதிகள் கோரினர். அந்த அபிப்பிராயத்தை இந்திய சர்க்காரும் வற்புறுத்தியதின் பேரில் தேர்தல்களை ஒத்திப்போட பிரஞ்சு சர்க்கார் இணங்கினார்கள்.

ஆனால், மறுபடியும் திடீரென்று இம்மாதம் இருபத்து நாலாந்தேதி தேர்தல்களை நடத்துவதென்று தீர்மானித்திருக்கிறார்கள். அதாவது சரியான கவனிப்பாளர்களின் முன்னிலையில் தேர்தல்கள் ஒழுங்காக நடைபெறுமாயின் முடிவு என்னவாகும் என்பதுபற்றிப் பிரஞ்சு சர்க்காருக்குச் சந்தேகம் எதுவும் இல்லையென்பது மேற்படி தீர்மானத்திலிருந்து நன்கு தெரிகிறது. அதனால்தான் அவசரக் கோலமாய் அள்ளித் தெளித்து முடிவைத் தங்கள் இஷ்டப்படி ஏற்படுத்திக் கொள்ள பிரஞ்சு இந்திய அதிகாரிகள் இந்த வேலையில் இறங்கியிருக்கிறார்கள்.

மேற்படி அதிகாரிகளுக்குச் சலாம் போடும் தாசர்கள் சிலர் இருக்கின்றனரென்றாலும், பெரும்பாலான பிரஞ்சு இந்திய மக்களும் பிரஞ்சு இந்தியப் பிரதேசங்கள் இந்தியாவுடன் சேருவதையே விரும்புகின்றனர். எனவே, பிரஞ்சு அதிகாரிகளின் பிடிவாதத்திற்கிணங்க இருபத்து நாலாந் தேதி தேர்தல் நடைபெறுமாயின்; பிரஞ்சு இந்திய மக்கள், குறிப்பாகப் புதுச்சேரியிலும் காரைக்காலிலும் வசிக்கும் தமிழ்ச் சகோதரர்கள், தங்களுடைய சொந்த வேற்றுமைகளை அடியோடு மறந்து தாங்கள் பாரத நாட்டின் புதல்வர்கள் என்பதை உலகமறிய நிரூபிப்பதுடன், பிரஞ்சு அதிகாரிகளின் சூழ்ச்சி படுதோல்வியுறும்படி செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## நாகரிகக் கொள்ளை!

ஒருவர் அளவுக்கு மிஞ்சி லாபம் தட்டினால், அது சட்டத்துக்கு உட்பட்டதாயிருப்பினும் அதைக் கொள்ளை லாபம் என்றுதான் சொல்லுகிறோம். சட்ட திட்டங்களையெல்லாம் காற்று வாக்கில் விட்டு விட்டு பிளாக் மார்க்கெட் வியாபாரம் செய்வோரைக் கொள்ளைக்காரர்கள் என்றும் தேசத் துரோகிகள் என்றும் குறிப்பிடுகிறோம். இதுபோன்றதொரு கைங்கரியத்தைச் சட்டத்தின் பெயரால் ஒரு சர்க்காரே செய்வதாயின், அதை என்னவென்று வர்ணிப்பது? "அதிகாரக் கொள்ளை" என்றுதான் அதைச் சொல்லவேண்டியிருக்கும்!

சமீபத்தில் பர்மா பார்லிமெண்டில் ஒரு மசோதா நிறைவேறியிருக்கிறது. நிலச்சுவான்தார்களிடமிருந்து நிலங்களைச் சர்க்கார் கைப்பற்றவும், அவற்றைக் குடியானவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கவும் அந்த மசோதா சர்க்காருக்கு அதிகாரமளிக்கிறது. அதனால் பர்மியர்கள் மாத்திரம் பாதிக்கப்படும் பட்சத்தில் அதைப்பற்றி நாம் எதுவும் ஆட்சேபிக்க வேண்டிய அவசியம் இராது. பர்மா சர்க்காருக்கு பர்மியர்கள் சம்பந்தப்பட்ட

# நிபுணர்கள் பூஜை!




வரையில் தங்கள் இஷ்டப்படி நடந்து கொள்ள உரிமையுண்டு. ஆனால் உண்மையில் மேற்படி மசோதா அங்குள்ள இந்தியர்களின் தலையில் கை வைப்பதற்கென்றே நிறைவேற்றப்பட்டதாகும்.

அந்தந்த தேசத்திலுள்ள தொழில் துறைகளையும் நிலபுலன்களையும் தங்களுடைய நிர்வாகத்தில் எடுத்துக்கொள்ள அந்தந்த சர்க்காருக்கு உரிமையுண்டு என்பதை யாரும் மறுக்கவில்லை. ஆனால் நியாயமான நஷ்டஈட்டுத்தொகை கொடுத்துவிட்டு சர்க்கார் அவற்றை ஆர்ஜிதம் செய்து கொள்ள வேண்டும். அதிலும் சகோதர தேச மக்களாகிய இந்தியர்களின் சொத்துக்கள் விஷயத்தில் பர்மா சர்க்கார் அதிக நேர்மையுடன் நடந்து கொள்ள வேண்டியது அவசியம். இந்தியர்களுக்கும் அவர்களுடைய சொத்துக்களுக்கும் பாதுகாப்பு அளிக்கக் கடமைப்பட்டுள்ள சர்க்கார், நியாயமான நஷ்டஈட்டுத்தொகை எதுவுமின்றிப் பறிமுதல் செய்வதுபோல் இந்தியர்களுடைய சொத்துக்களை ஆர்ஜிதம் செய்து கொள்வது பெரும் அநீதியாகும்.

## கேட்கவா வேண்டும்?

"உன்னால் நான் கெட்டேன், என்னால் நீ கெட்டாய்" என்று நிஜாமும் கோவாவிலுள்ள போர்ச்சுகீய சர்க்கார் பிரதிநிதியும் ஒருவரை ஒருவர் கடிந்து கொள்ளும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது! மற்ற இடங்களிலிருந்து வந்ததுபோல் கோவாவிலிருந்தும் நிஜாமுக்குத் திருட்டுத்தனமாக ஆயுதங்கள் வந்து கொண்டிருந்தன. இந்தியாவுடன் சேராமல் தனிக் காட்டு ராஜாவாக இருப்பதில் நிஜாம் வெற்றி பெற்றால், கோவாவும் இந்தியாவுடன் சேராமல் தனி அரசாக இருப்பதில் வெற்றி பெறலாம் என்று கோவாவிலுள்ள போர்ச்சுகீய அதிகாரிகள் கனவு கண்டு வந்தனர். ஹைதராபாத் வெறியர்களைப் போல் போர்ச்சுகீய அதிகாரிகளும், கோவாவைக் கைப்பற்ற இந்தியா முயற்சிக்குமாயின் இரத்த ஆறு ஓடும் என்று ஜம்பம் பேசினர். நிஜாமைப்போல் அவர்களும் தேச பக்தர்களைச் சிறைப் படுத்தினர். ஆனால், இப்போது ஹைதராபாத் சமஸ்தானம் இந்திய வீரர்களை எதிர்த்து நிற்க முடியாமல் ஐந்தே நாட்களுக்குள் சரணடைந்து விட்டதால், கடுகு அளவுள்ள கோவா "என் கதி என்ன வாகும்?" என்று கவலைப்படுவது இயற்கையே!

கோவாவில் பல மாதங்களாக தேசியக் கிளர்ச்சி நடந்து வருகிறது. அதன் விளைவாகப் பல தேசபக்தர்கள் சிறைப் பட்டிருக்கின்றனர். போதாக்குறைக்கு நிஜாமும் சரணடைந்து விட்டதால், கோவாவின் எதிர்காலம் என்ன என்பது பற்றி ஆலோசிப்பதற்காகப் போர்ச்சுகீய சர்க்கார் கோவாவிலுள்ள தங்களுடைய பிரதிநிதியை அவசரமாக அழைத்திருக்கிறார்கள். மகா வல்லமை பொருந்திய பிரிட்டிஷார் இந்தியாவை விட்டு விட்டு வெளியேறி விட்டார்கள். பிரஞ்சுக்காரர்களும் வெளியேறுவதற்கான பூர்வாங்க வேலைகளை ஆரம்பித்து விட்டனர். ஆடிக் காற்றில் அம்மியும் கல்லுரலும் பறக்கும் போது இலவம் பஞ்சு 'எனக்கு என்ன வழி' என்று கேட்கவா வேண்டும்?

# விலகுவதா? வேண்டாமா?

அப்போது முஸோலினியின் கீர்த்தி உச்சநிலையை அடைந்திருந்தது. இத்தாலியை உய்விக்க வந்த அவதார புருஷரென்று அவரை உலக நாடுகள் புகழ்ந்தன. ஐரோப்பாவுக்கு விஜயம் செய்யும் பிரமுகர்கள் முஸோலினியைத் தரிசனம் செய்வதை ஒரு பெரும் பாக்கியமாகக் கருதினர். வின்ஸ்டன் சர்ச்சில் உள்பட பிரிட்டிஷ் பிரமுகர்கள் யாவரும் முஸோலினியை வானளாவப் புகழ்ந்து வந்தனர்.

ஆனால், அவ்வளவு மகத்துவத்துடன் விளங்கிய முஸோலினி இத்தாலிக்கு விஜயம் செய்த ஒரு மனிதரைத் தரிசிப்பதற்காக எவ்வளவோ பாடுபட்டார். ஆளுக்கு மேல் ஆளாகத் தமது பிரதிநிதிகளை அனுப்பினார். முஸோலினி அந்த மனிதரைப் பார்க்க ஆசைப்படுகிறார் என்று அவர்கள் நயமாகக் கூறினர். பிறகு மிரட்டியும் பார்த்தனர்.

எனினும் அந்த மனிதர் எதற்கும் மசியவில்லை. இறுதியில் மேற்படி தூதர்கள் ஏமாற்றமடைந்து திரும்பினர். அந்த மனிதரைப் பார்ப்பதற்காக முஸோலினி செய்த பெரு முயற்சி அவ்வாறாகத் தோல்வியுற்றது!

இந்த அதிசய சம்பவம் ஒரு மாமாங்கத்துக்கு முன், அதாவது 1936-ம் ஆண்டில் நிகழ்ந்தது.

இத்தாலியிலே இத்தாலியின் சர்வாதிகாரி முஸோலினிக்குப் பேட்டியளிக்க முடியாது என்று மறுக்கத் துணிந்த அந்த மகா தீரர் யார்?

அவர் எந்த தேசத்தின் சர்வாதிகாரியுமல்ல, சக்கரவர்த்தியுமல்ல.

அவர்தான் நமது மாபெரும் தலைவரும் மனித குல மாணிக்கமும் இந்தியாவின் பிரதம மந்திரியுமான பண்டித ஜவாஹர்லால் நேரு!

அபிஸீனியா மீது அக்கிரமமாகப் போர் தொடுப்பதற்குக் காரண புருஷரான முஸோலினியைப் பார்ப்பது, தம்முடைய உயர்ந்த கொள்கைக்கு முரணாகும் என்று கருதியே பண்டித நேரு அவரது அழைப்பை ஏற்க மறுத்து விட்டார்!

* * *

சுதந்திரத்தை இழந்து கிடந்த இந்தியாவில் சிறை செல்லுவதையே தமது திருப்பணியாகக் கொண்டிருந்த ஜவாஹர்லால்ஜியைக் கண்டு பேசும் பாக்கியம் நமக்குக் கிடைக்குமா என்று அன்று முஸோலினி ஏங்கியதைப் போலவே, சுதந்திரம் பெற்ற இந்தியாவின் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் முடிசூடா மன்னரான ஜவாஹர்லால்ஜியைக் கண்டு பேச சர்வ தேசத் தலைவர்கள் இன்று போட்டி போட்டு வருகிறார்கள்.

ஸ்படிகம் போலத் தூய்மையான மனம் படைத்த அவருடைய அபிப்பிராயங்களை ஆசிய நாடுகளின் அபிப்பிராயங்களாகக் கொள்ளலாம் என்றும் அவர்கள் கருதுகின்றனர்.

பரஸ்பரம் சந்தேகம் கொண்டு சீறி விழும் வல்லரசுப் பிரதிநிதிகள், சொல்வதும் செய்வதும் ஒன்றே என்ற கொள்கைக்கு உருவாகவும் உலகத்துக்கு இலட்சிய மகா புருஷராகவும் விளங்கும் நமது அரும் பெரும் தலைவரிடம் மகத்தான மதிப்பும் நம்பிக்கையும் வைத்திருக்கிறார்கள் என்பது, அவருக்கு பிரிட்டனிலும் ஐரோப்பாவிலும் அளிக்கப்பட்ட அமோகமான வரவேற்பிலிருந்து வெளியாகியிருக்கிறது.

* * *

லண்டனில் நடைபெற்று வரும் காமன்வெல்த் மகா நாட்டுக்கு பிரிட்டிஷ் சர்க்காரின் அழைப்புக் கிணங்க, பண்டித ஜவாஹர்லால் நேரு சென்றிருக்கிறார்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாடுகளின் பிரதிநிதிகள் அடங்கிய இத்தகைய மகாநாடு அடிக்கடி நடப்பது வழக்கம் என்றாலும், இதற்கு முன் நடைபெற்ற மகாநாடுகளுக்கும் இப்போது நடைபெறும் மகாநாட்டுக்கும் எவ்வளவோ வேற்றுமை உண்டு.

இதற்கு முன் இந்தியா, இலங்கை முதலிய நாடுகளின் பிரதிநிதிகள், பிரிட்டிஷ் சர்க்காரின் கட்டளை எப்படியோ அப்படியே கைதூக்கி வந்தார்கள் என்பது பகிரங்க இரகசியமாகும்.

ஆனால், இப்போதோ இந்தியா முதலிய நாடுகள் சுதந்திரம் பெற்று விட்டன. பர்மாவோ சுதந்திரம் பெற்றபின் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்தே விலகி விட்டது.

மற்ற நாடுகளைப் பற்றி பிரிட்டன் அவ்வளவாகக் கவலைப்படவில்லை. அடுத்துள்ள அயர்லாந்து பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து விலகுவதைக் குறித்தும் பிரிட்டன் கவலை கொள்ளவில்லை.

ஆனால், இந்தியா என்ன செய்யப் போகிறது என்பதை பிரிட்டன் மாத்திரமல்ல, அமெரிக்கா, ருஷ்யா முதலிய பல வல்லரசுகளும் சிரத்தையுடன் கவனித்து வருகின்றன. ஏனெனில் ஆசிய நாடுகளின் எதிர்காலப் போக்கு, ஆத்ம பலமும் ஜீவசக்தியும் வாய்க்கப் பெற்ற இந்தியாவின் போக்கையே பொறுத்திருக்கிறது.

அது மாத்திரமல்ல, உலகில் அமைதி நிலவும்படி செய்வதற்கு இந்தியா உதவி புரிய முடியுமென்பதையும் வல்லரசுகள் உணர ஆரம்பித்திருக்கின்றன. பிரபல பிரிட்டிஷ், அமெரிக்கப் பத்திரிகைகளும் பிரெயில்ஸ்போர்ட் போன்ற அறிஞர்களும் மேற்படி உண்மையை எடுத்துக் கூற முற்பட்டிருக்கிறார்கள்.

"பண்டித ஜவாஹர்லால் நேரு இந்தியாவின் இணையற்ற தலைவர்; காந்திஜியின் வாரிசு; உலகில் அமைதியை நாடும் கோடிக் கணக்கான ஜனங்களின் அபிலாஷையைப் பிரதிபலிப்பவர். எனவே அவர்தான் உலகத்தின் போராட்டத்தைத் தீர்த்து மத்தியஸ்தம் செய்து வைக்கத் தகுதியானவர். எதிரிகளிடமும் நட்பு உணர்ச்சி பிரதிபலிக்கும்படி செய்வதில் அவரைக் காட்டிலும் சிறந்த ராஜதந்திரி இவ்வுலகில் வேறு எவருமில்லை. உலகில் அமைதி நிலவும்படி செய்யும் மகத்தான காரியத்தைச் சாதிக்கும் தைரியமும் உறுதியும் அவரிடத்தில் தான் இருக்கின்றன. உலகில் பட்டினியும் பிணியும் தாண்டவமாடி வருகையில், அழிவு ஆயுதங்களை உற்பத்தி செய்வதற்காகச் செல்வத்தை வாரி யிறைக்கும் வெறியை ஒழித்து, வறண்டு கிடக்கும் பூமி செழிப்புறும்படிச் செய்யும் உரிமை இந்தியாவைக் காட்டிலும் வேறெந்த நாட்டுக்கு உண்டு? அந்த ஆக்க வேலையைச் செய்து முடிப்பதற்காக நம்மெல்லோரையும் ஒன்று திரட்டக் கூடியவர் இந்தியாவின் பிரதம மந்திரி ஒருவர் தான்" என்று அறிஞர் பிரெயில்ஸ்போர்ட் கூறுகிறார்.

• • •

இந்தியாவின் கோரிக்கைக்கு இணங்க பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து "க்விட்" செய்தனர். ஆனால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து இந்தியா "க்விட்" செய்துவிடக் கூடாதென்று பிரிட்டிஷார் இப்போது மன்றாடி வருகிறார்கள்.

அந்தக் கோரிக்கைக்கு இணங்குவதா வேண்டாமா என்பதை நிர்ணயம் செய்ய வேண்டிய பொறுப்பு இந்தியாவைச் சார்ந்திருக்கிறது.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து இந்தியா விலகாமல் இருப்பதற்காக பிரிட்டிஷார் பிரம்மப்பிரயத்தனம் செய்து வருவதன் காரணம் யாருக்கும் தெரியாததல்ல.

சென்ற இரண்டு மகா யுத்தங்களிலும் இந்திய சிப்பாய்களின் வீர தீர பராக்கிரமங்கள்தான் பிரிட்டிஷாரின் வெற்றிக்கு அடிகோலின.

தவிர, பிரிட்டனிடம் இந்தியாவின் போக்கை அனுசரித்தே மற்ற ஆசிய நாடுகளின் போக்கும் உருவாகும்.

உலகத்தில் பொதுஉடைமைக் கொள்கை பரவாமல் தடுக்கவும் இந்தியாவின் ஒத்துழைப்பு அத்தியாவசியமென பிரிட்டன் நினைக்கலாம்.

மற்றும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து இந்தியா விலகிவிட்டால் பின்னர் மலாயா, ஹாங்காங் முதலிய இடங்களிலிருந்தும் பிரிட்டிஷார் வெளியேறும்படி நேரும்.

இதெல்லாவற்றைக் காட்டிலும் மற்றொரு முக்கிய காரணமும் இருக்கிறது.

பிரிட்டிஷாரின் வர்த்தக அபிவிருத்திக்கும் எதிர்கால சுபிட்சத்துக்கும் இந்தியாவின் மூலப் பொருள்கள் இன்றியமையாதவை.

• • •

இந்தியா, இலங்கை, பாகிஸ்தான் இவற்றைத் தவிர பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த மற்ற நாடுகளெல்லாம் பிறப்பு, மதம், பண்பாடு, பழக்க வழக்கங்கள் முதலிய சகல அம்சங்களிலும் நெருங்கிய ஒற்றுமையுடையவை. மேற்படி நாட்டினர் ஆங்கிலேயரின் பரம்பரையையே சேர்ந்தவர்கள்.

ஆனால், நேர்மையற்ற முறையிலும் தயவஞ்சகமாகவும் பிரிட்டன் இந்தியாவை ஆக்கிரமித்து இருநூறு வருஷ காலம் ஆட்சி புரிந்தது என்பதைத் தவிர, இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் இயற்கையான அம்சம் எதையும் அடிப்படையாகக் கொண்ட தொடர்பு இருந்ததில்லை.

# தன் வினை...

இந்தியாவுக்கு விரோதமாக துஷ்பிரசாரம் செய்து இந்தியாவின் முகத்தில் கரியைப் பூச நினைத்த பெருந்தனவான் தானே தாரைப் பூசிக் கொள்கிறார்!

அயர்லாந்தில் பிரிட்டன் புரிந்த அட்டூழியங்களை அத்தேச மக்கள் இன்னும் மறக்கவில்லை. பூகோளரீதியாக பிரிட்டனை அடுத்திருந்தும் பிரிட்டனுடன் உள்ள தொடர்பை அறவே கத்தரித்துக் கொள்ளும் அளவுக்கு பிரிட்டன் மீது அயர்லாந்துக்கு வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது.

சென்ற மகாயுத்தத்தின்போது அயர்லாந்து பிரிட்டனுடைய கட்சியில் சேராமல் நடுநிலைமை வகித்ததற்கும் அதுதான் காரணம்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து இந்தியா அறவே விலகிவிட வேண்டும் என்று கூறுவோரும், பிரிட்டன் இந்தியாவில் புரிந்த அட்டூழியங்களை மனதிற் கொண்டே அவ்வாறு கூறுகின்றனர்.

ஹைதராபாத், காஷ்மீரப் பிரச்னைகளை யொட்டி இன்னும் சில பிரிட்டிஷ் பிரமுகர்கள் செய்து வரும் சூழ்ச்சிகள் அந்தகையோரின் அபிப்பிராயத்துக்கு ஆக்கமளிப்பதாக இருக்கின்றன.

எனினும் உலக அமைதியையும் உலக மக்களின் க்ஷேமத்தையும் முக்கியமாகக் கருதும் அன்பு உருவான நமது தலைவர்கள் எந்த தேசத்துடனும்,—அமெரிக்கா, பிரிட்டன், ருஷ்யா முதலிய எந்த தேசத்துடனும் நட்பும் தொடர்பும் வைத்துக் கொள்ளவே விரும்புகின்றனர்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துடன் தொடர்பு வைத்துக்கொள்வது உலகத்தின் அமைதிக்கோ நலனுக்கோ முரணாக இருக்குமாயின், மேற்படி தொடர்பை அடியோடு கத்தரித்துக் கொண்டுவிட இந்தியா தயங்காது.

இந்தியா பரிபூரண சுதந்திரம் வாய்ந்த குடியரசாகத் திகழ்வது, அது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துடன் மாத்திரமின்றி, இதர நாடுகளுடனும் நேர்மையான தொடர்பு வைத்துக் கொள்வதற்கு எவ்விதத்திலும் இடையூறாக இராது.

பிரிட்டனுக்கு விஜயம் செய்துள்ள நமது அருமைத் தலைவர் பிரிட்டிஷ் ராஜதந்திரிகளுடனும், பாரிஸில் நடைபெறும் ஐக்கிய நாடுகள் மகாசபைக் கூட்டத்திற்காக வந்துள்ள உலக ராஜதந்திரிகளுடனும் பேசிவருகிறார்.

எனவே, அவர்களுடைய அந்தரங்கமான கருத்துக்களை அறிந்து கொண்டு ஜவாஹர்லால்ஜி காமன்வெல்த் பிரச்னை சம்பந்தமாக இந்தியாவின் க்ஷேமத்துக்கு முரணின்றி தகுந்த யோசனைகளைக் கூறுவார் என்பதிலும், அந்த யோசனைகளை அடிப்படையாகக் கொண்டு இந்திய அரசியல் நிர்ணய சபை திட்டமான ஒரு முடிவுக்கு வரும் என்பதிலும் இந்திய மகாஜனங்கள் பூரண நம்பிக்கை வைக்கலாம்.

# அலை ஓசை

'கல்கி'

-சந்திரா-

இருபதாம் அத்தியாயம்

## பாரம் நீங்கிற்று

புருஷர்கள் இருவரும் வெளியேறிய உடனே சீதா தாரிணியின் அருகில் வந்து, "அக்கா! இது என்ன? இவர் டெலிபோனில் என்ன வெல்லாமோ பயங்கரமாகப் பேசினாரே? என்ன விஷயம்? எதற்குப் போலீஸைக் கூப்பிட்டார்?" என்று கேட்டாள்.

"ஆமாம், சீதா! பயங்கரமான விஷயந்தான்!" என்றாள் தாரிணி.

"என்ன பயங்கரமான விஷயம்? சீக்கிரம் சொல்லுங்களேன்!"

"அதை என்னத்துக்குக் கேட்கிறாய், சீதா? நீ தெரிந்து கொள்ளாமலிருப்பதே நல்லது. உனக்குத் தெரிந்து என்ன ஆகப்போகிறது?"

"அவரைப் போலவே நீங்களும் பேசுகிறீர்களே? எனக்கு ஏன் தெரியக்கூடாது? உங்களுக்கெல்லாம் தெரிந்திருப்பது எனக்குத் தெரிந்தால் என்ன? நீங்கள் மறைக்கப் பார்ப்பதினாலேதான் எனக்கு மனக் கலக்கம் அதிகமாகிறது" என்றாள் சீதா.

"நீ சொல்லுவது சரி. உனக்குத் தெரிந்திருக்க வேண்டியதுதான். நான் சொல்லாவிடில் உனக்குத் தெரியாமலே இருந்து விடுமா? சொல்வதற்கு எனக்கு அருவருப்பாயிருக்கிறது. அதனால்தான் தயங்கினேன்."

"அப்படியானால் வேண்டாம்! அவர் வரட்டும். கேட்டுக் கொள்கிறேன்."

"வேண்டாம்; நானே சொல்லிவிடுகிறேன். நாங்கள் மூன்று பேரும் காரில் வந்து கொண்டிருந்தோம். வழியில், உங்கள் வீட்டுக்கு வரும் இந்தச் சாலை பிரியும் முடுக்கில்......"

தாரிணி மறுபடியும் தயங்கினாள். அவள் உடம்பு வெட வெட வென்று நடுங்கிற்று.

"அக்கா! நீங்கள் ரொம்ப தைரியசாலியாயிற்றே! ஏன் இப்படிப் பயப்படுகிறீர்கள்?"

"ஆம், சீதா! எனக்குப் பயமாய்த்தானிருக்கிறது. இதற்கு முன்னால் நான் இப்படிப் பயப்பட்டதே யில்லை.

பீஹார் பூகம்பத்தின் போது எவ்வளவோ சொல்ல முடியாத பயங்கரங்களை யெல்லாம் பார்த்தேன். அப்போதுகூட நான் பயப்படவில்லை. இன்றைக்கு...... இதோ பார்! என் கை எப்படி நடுங்குகிறது?''

அப்போதுதான் தாரிணியின் கைகளை உற்றுப் பார்த்த சீதா, "ஐயோ! இரத்தம்போ லிருக்கிறதே!" என்று பீதி நிறைந்த குரலில் கூறினாள்.

"சத்தம் போடாதே!......ஆமாம்; இரத்தந்தான். பின்னே என்ன நினைத்தாய்? 'க்யூடெக்ஸ்' பூசிக்கொண்டிருப்பதாக நினைத்தாயா? உனக்கு அந்த மாதிரி நாகரிக மெல்லாம் இப்போது பழக்கமாகி வருகிற தென்று கேள்விப் பட்டேன்......''

"யார் சொன்னார்கள்?''

"யார் சொன்னால் என்ன? தாமாவும் பாமாவும் சொன்னார்கள். அதற்கு என்ன இப்போது? அவர்களையாவது உன்னையாவது நான் குறை சொல்லப் போவதில்லை.''

"ரொம்ப வந்தனம். இன்றைக்கு நடந்ததைச் சொல்லுங்கள். மூன்று பேரும் காரில் வந்து கொண்டிருந்தீர்கள். அப்புறம்?''

அப்புறம் நடந்ததைத் தாரிணி தட்டுத் தடுமாறிச் சொல்லி முடித்தாள். அதன் விவரமாவது:—

மூன்று பேரும் காரில் வந்துகொண்டிருந்தார்கள். அந்த வீடு இருந்த சாலையின் திருப்பத்தில் ராகவன் திடீரென்று பிரேக்போட்டு வண்டியை நிறுத்தினான். தாரிணியும் சூரியாவும் ஒரே சமயத்தில் 'என்ன? என்ன?' என்று கேட்டார்கள். ராகவன் பதில் சொல்லாமல் வண்டியிலிருந்து இறங்கினான். மற்ற இருவரும் இறங்கினார்கள். சாலையில் வண்டியை வழி மறித்துக் கொண்டு ஏதோ கிடந்தது. கொஞ்சம் நெருங்கிப் போய்ப் பார்த்ததும் அது ஒரு மனிதனுடைய உடல் என்று தெரிய வந்தது.

'யாரோ குடித்துவிட்டுச் சாலையில் விழுந்து கிடக்கிறான்; சனியன் பிடித்தவன்!' என்றான் ராகவன்.

வண்டி மோதித்தான் அவனைத் தள்ளி யிருக்கவேண்டும் என்ற எண்ணம் தாரிணியின் மனதில் உதித்தது. பேச்சின் சுவாரஸ்யத்தில் சாலையில் குறுக்கே போனவனைக் கவனியாமல் ராகவன் காரை விட்டிருக்க வேண்டும் என்று அவள் நினைத்தாள். சூரியாவுக்கும் அதே சந்தேகம் தோன்றியது.

'வண்டி மோதித் தள்ளிவிட்டதோ, என்னமோ?' என்று பயந்துகொண்டே சொன்னான் சூரியா.

'நான்ஸென்ஸ்; வண்டி மோதவும் இல்லை, ஒன்றுமில்லை' என்று ராகவன் கண்டிப்பாகக் கூறினான்.

'மோதித் தள்ளியிராவிட்டாலும் ஒரு வேளை படுத்திருந்தவன்மேல் ஏறியிருக்கலா மல்லவா? சமீபத்திலே போய்ப் பார்க்கலாம்' என்றான் சூரியா.

'ஆமாம், பார்க்கத்தான் வேண்டும்' என்று தாரிணியும் சொன்னாள்.

'பேசாமல் வண்டியை ஒதுக்கி ஓட்டிக் கொண்டு போய்விடலாம். வண்டியில் ஏறுங்கள்!' என்றான் ராகவன்.

சூரியாவும் தாரிணியும் அதைக் கேட்காமல் விழுந்து கிடந்தவனின் கிட்டப் போய்ப் பார்த்தார்கள்.

உடுத்தி யிருந்த உடுப்பிலிருந்து யாரோ பெரிய மனுஷர் என்று தோன்றிற்று. சூரியா மூக்கில் விரலை வைத்துப் பார்த்துவிட்டு 'மூச்சு வருகிறது! உயிர் இருக்கிறது!' என்றான்.

மோட்டாரின் முன் சக்கரம் அந்த மனிதனைத் தொட்டுக் கொண்டிருந்ததைத் தாரிணி கவனித்தாள்.

மோட்டார் மோதித்தான் அந்த மனுஷன் மூர்ச்சையடைந்து கிடக்கிறான் என்று உறுதியாக நம்பினாள்.

'வண்டியில் ஏறுங்கள்; நாம் போகலாம்!' என்றான் ராகவன்.

தாரிணி 'நன்றாயிருக்கிறது! நடு ரோட்டில் ஒரு மனிதனை மோதித் தள்ளிவிட்டு நாம் பாட்டுக்குப் போய் விடுகிறதா? காரில் ஏற்றிக்கொண்டு உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போக வேண்டும்' என்றாள்.

சூரியாவும் அதை ஆமோதித்தான்.

'அப்படியானால் பரோபகாரிகளான நீங்களே தூக்கிக் காரின் பின்ஸீட்டில் போடுங்கள்! என்னால் முடியாது' என்று ராகவன் சொன்னான்.

'பேஷாக நான் தூக்குகிறேன்' என்று சொல்லிவிட்டுத் தாரிணி தலைப்புறம் பிடித்துத் தூக்கினாள். சூரியா

இடுப்பைப் பிடித்துத் தூக்கினான். தூக்கும்போது தாரிணி கழுத்தின் அடியில் ஒரு கையைக் கொடுத்தான். அந்தக் கை ஈரமாயிற்று. தரையிலிருந்து தூக்கியதும், விழுந்து கிடந்தவனுடைய தலைக்குக் கீழே இரத்தம் குட்டையாகத் தேங்கியிருந்தது தெரிந்தது. அப்படியும் தாரிணியின் மன உறுதி குன்றவில்லை. கை நடுக்கத்தைச் சமாளித்துக் கொண்டான். இரண்டு பேருமாகத் தூக்கிக்கொண்டு வந்து காரின் பின் ஸீட்டில் போட்டார்கள். தரையில் இரத்தம் தேங்கி நின்றதை ராகவன் பார்த்துவிட்டு, 'ஆஹா இது என்ன ஆபத்து!' என்றான். 'எல்லாம் நம்மால் வந்த ஆபத்துதானே? ஆஸ்பத்திரிக்கு வண்டியை விடுங்கள்?' என்றான் தாரிணி.

'ரொம்ப சரி! சீக்கிரம் ஏறித் தொலையுங்கள்!' என்றான் ராகவன்.

இரண்டுபேரும் அவசரமாக முன் ஸீட்டில் ஏறிக் கொண்டார்கள்.

ராகவன் வண்டியை ஓட்டத் தொடங்கியதும் 'நீங்கள் இரண்டு பேரும் சுத்த முட்டாள்கள். உங்களை நான் தேடி வந்ததே தப்பு' என்றான்.

'ஆமாம், தப்புத்தான்! உங்களை யார் வரச் சொன்னது?' என்று தாரிணி கேட்டாள்.

'அதன் பலன் கைமேல் கிடைத்து விட்டது. என்னைக் கொலைக் கேஸில் மாட்டி வைத்து விட்டீர்கள். இந்த வண்டி அந்த மனிதன்மீது படவேயில்லை. அப்படிப் பட்டிருந்தால் அந்த மாதிரி இரத்தம் தேங்கியிராது. யாரோ அவனைக் குத்திப் போட்டு விட்டுப் போயிருக்கிறார்கள். அநாவசியமாக என்னை இதில் மாட்டி வைத்து விட்டீர்கள். என்னை மாத்திரம் என்ன? உங்களைக் கூடத்தான்!'

இப்படி ராகவன் சொன்னதைக் கேட்டதும் அதில் உண்மையிருக்க வேண்டும் என்று தாரிணிக்குத் தோன்றிவிட்டது. தானும் சூரியாவும் செய்தது பிசகுதானோ என்ற ஐயம் உண்டாயிற்று.

அப்போது சூரியா, 'மாப்பிள்ளை! நீங்கள் சொல்வது உண்மையாயிருந்தால், நமக்கு என்ன பயம்? நம் பேரில் இந்தக் கொலைக் குற்றத்தைச் சாட்ட முடியாதல்லவா?' என்றான்.

'அது வேறே வேணுமா? கொலைக் கேஸில் சாட்சியாக இழுக்கப்படுவது போதாதா? பத்திரிகைகளிலே நம் பெயர்கள் அடிபடுவது போதாதா?' என்றான் ராகவன்.

'போனது போகட்டும்; இப்போது என்ன செய்யலாம்? அதைப்பற்றி யோசியுங்கள்!' என்று தாரிணி சமாதானமாகப் பேசினாள்.

'எனக்கு யோசிக்கும் சக்தியேயில்லை. நீங்கள்தான் யோசனை சொல்லுங்கள்! வண்டியை எங்கே விடட்டும்?' என்றான் ராகவன்.

'ஆஸ்பத்திரிக்கு நேரே போகலாம்; அல்லது போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகலாம்' என்றான் சூரியா.

அதைத் தாரிணி ஆமோதித்தாள்.

'இரண்டு இடத்துக்கும் சேர்ந்தாற் போல் போக முடியாதல்லவா? முதலில் எந்த இடத்துக்குப் போவது?' என்று ராகவன் கேட்டான்.

இதற்குப் பதில் சொல்ல அவர்களுக்குத் தெரியவில்லை. இரண்டு பேரும் மௌனம் சாதித்தார்கள்.

'இரண்டு இடத்துக்கும் நான் போகப் போவதில்லை. எனக்குக் கைநடுங்குகிறது. இனிமேல் வண்டி ஓட்டினால் எங்கேயாவது மரத்தில் மோதி விடுவேன். நேரே வீட்டுக்கு வண்டியை விடுகிறேன். அங்கிருந்து டெலிபோனில் பேசிக் கொள்ளலாம்' என்றான் ராகவன்.

தாரிணிக்கு உடனே சீதாவின் நினைவு உண்டாயிற்று. இந்த விஷயத்தையெல்லாம் அவள் அறிந்தால் எத்தனை மனக் குழப்பம் அடைவாள்? ஏற்கெனவே கொஞ்சம் 'ஹிஸ்டீரியா' உண்டு. இதனால் அதிகமாகி விட்டால் என்ன செய்கிறது? ஆகையால் ராகவனிடம் வீட்டுக்கு ஓட்ட வேண்டாம் என்று வேண்டிக்கொள்ள நினைத்தாள். அதற்குள்ளே கார் நின்று விட்டது. அதாவது ராகவன் வீட்டு வாசலுக்கு வந்தாகி விட்டது.

* * *

மேற்கூறிய விவரத்தை அடங்காத ஆவலுடனும் கவலையுடனும் பயங்கர உணர்ச்சியுடனும் கேட்டுக் கொண்டிருந்த சீதா, "அக்கா! இது என்ன விபரீதம்? இவருக்கு ஏதாவது அபாயம் நேருமா? ஒரு வேளை போலீ

ஸார் இவரை அரெஸ்டு செய்து விடுவார்களோ ?'' என்று நடுங்கிக் கொண்டு கேட்டாள்.

"பயப்படாதே, சீதா ! அப்படி யொன்றும் நேர்ந்து விடாது. இந்தப் புது டில்லி போலீஸ்காரர்கள்கூட அவ்வளவு மூடத்தனமாக நடந்து கொள்ள மாட்டார்கள் ! மேலும், உன் கணவர் பெரிய உத்தியோகஸ்தர். செல்வாக்கு அதிகம் உள்ளவர். அவரை யாரும் கைது செய்ய முடியாது. ஒரு வேளை வாக்கு மூலம் கொடுப்பதற்காகப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் வரும்படி நேரிடலாம். மற்றப்படி ஒன்றும் நேராது'' என்றாள் தாரிணி.

இதைக் கேட்டதும் சீதாவின் மனதிலிருந்த பெரும் பாரம் நீங்கிற்று. வேறு விஷயங்களைப் பற்றிச் சிந்திக்க முடிந்தது. அந்த நேரத்தில் அதே வீட்டுக் கொல்லைப் புறத்துத் தட்டு முட்டு சாமான் அறையில் தாரிணியின் தாயார் இருந்தா ளென்பது பளிச்சென்று நினைவுக்கு வந்தது. ஆனால் அதைப் பற்றித் தாரிணியிடம் சொல்ல முடியாதபடி யல்லவா தன் வாயைக் கட்டிப் போட்டிருக்கிறாள் அந்த ரஸியா பேகம்? அவளுக்குக் கொடுத்த வாக்குறுதியை மீறலாமா ? மீறினால் இலேசில் தன்னை அவள் விடுவாளா ?

ரஸியா பேகம் இரத்தம் தோய்ந்த கத்தியைக் குழாயில் அலம்பிய காட்சி சீதாவின் கண் முன்னால் வந்தது. அவளுக்கும் இப்போது தாரிணி விவரித்த சம்பவத்துக்கும் ஏதேனும் சம்பந்தம் உண்டா ? ஏன் இருக்கக் கூடாது ? அப்படியானால் தான் இருக்க இடங் கொடுத்து மறைத்து வைத்திருப்பது ஒரு கொலைகாரியையா ? தான் செய்தது சரியா ? இது தன் கணவருக்குத் தெரிந்தால் என்ன சொல்வார் ?

சீதாவுக்குச் சட்டென்று காரின் பின் ஸீட்டில் தான் பார்த்த மூட்டை போன்ற வஸ்து ஞாபகம் வந்தது.

"அக்கா ! காரில் மூட்டைமாதிரி ஒன்று கிடந்ததே ! அது ...?'' என்றாள்.

"ஆமாம், சீதா ! அது மூட்டையில்லை ; சாலையிலிருந்து நாங்கள் எடுத்துப் போட்ட மனிதன் ! ஆனால் அதைப் பற்றியே ஏன் பேசிக் கொண்டிருக்க வேண்டும் ? வேறு விஷயம் ஏதாவது பேசலாம் !'' என்றாள் தாரிணி.

மூன்று பேரும் காரின் முன்ஸீட்டில் உட்கார்ந்து வந்த காரணம் இப்போது சீதாவுக்குப் புலப்பட்டது. அதிலிருந்து வேறு விஷயத்துக்கு மனம் பாய்ந்தது.

"அக்கா ! நீங்கள் மூன்று பேரும் இன்றைக்கு எப்படி ஒன்றாய்ச் சேர்ந்தீர்கள் ?'' என்று கேட்டாள்.

"சூரியாவின் அறைக்கு நான் போயிருந்தேன். சூரியாவைத் தேடிக் கொண்டு உன் கணவரும் வந்து சேர்ந்தார். எல்லாருமாக உன்னைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டு வந்தோம். வருகிற வழியிலேதான் இப்படி ஆயிற்று'' என்றாள் தாரிணி.

"சூரியாவைப் பார்க்கப் போயிருந்தீர்களா ? என்னைப் பார்க்க ஒரு தடவைகூட வரவில்லையே ? என்னை அடியோடு மறந்து விட்டீர்கள் !''

"மறக்கவில்லை, சீதா ! வரலாம் என்றுதான் இருந்தேன். ஆனால் உன் கணவர் என்ன எண்ணிக் கொள்வாரோ என்று பயமாயிருந்தது. சூரியாவுக்கும் அதுதான் யோசனை.''

இதைக் கேட்டபோது சீதாவுக்கு எரிச்சலாயிருந்தது. இவர்கள் இரண்டு பேரும் இப்போது ஒன்றாய்ப் போய் விட்டார்கள் போலிருக்கிறது ! நாம்தான் தனியாகப் போய்விட்டோம் ! சூரியாவுக்கு நம்மைக் காட்டிலும் இவளிடத்தில் என்ன சிநேகம் வந்தது ? — இப்படி நினைத்துச் சீதா, "இவரிடம் எதற்காக நீங்கள் பயப்பட வேண்டும் ? உங்களைக் கடித்து விழுங்கி விடுவாரா ? இவர்தான் எப்போதும் உங்கள் தியானமாகவே இருக்கிறாரே ? சூரியாவுக்கு இவ்வளவு வஞ்சனை உண்டு என்று இதுவரையில் எனக்குத் தெரியாது !'' என்றாள்.

தாரிணி சீதாவைச் சிறிது உற்றுப் பார்த்து விட்டு, "ஏன் இப்படிச் சொல்கிறாய் ! உன் அம்மாஞ்சியைப் போல் சூது வாது இல்லாத சாதுவை நான் பார்த்ததேயில்லை !'' என்றாள்.

"ஆமாம் ; சூரியா சாதுவாகத்தான் இருந்தான். கொஞ்ச காலமாகத்தான் சூது வாது வந்திருக்கிறது. ஆக்ராவிலிருந்து திரும்பியதற்குப் பிறகு நீங்கள் இன்றைக்குத்தான் அவனை முதல் தடவை பார்த்தீர்களா ?''

"இல்லை, சீதா ! திரும்பி வந்தவுடனேயே சூரியாவை நான் போய்ப்

பார்த்தேன். என்னை நெற்றியில் காயப்படுத்தியது பற்றி வருத்தப்பட்டுக் கடிதம் எழுதி யிருந்தார் அல்லவா? அதற்குச் சமாதானம் சொல்லப் போனேன்'' என்றாள் தாரிணி.

''அப்படித்தான் நினைத்தேன்'' என்றாள் சீதா.

''எப்படி நினைத்தாய்?''

''நீங்கள் சூரியாவைப் பார்த்திருப்பீர்கள் என்று நினைத்தேன். பார்த்தது மட்டுமல்ல; ரஜனிபூரில் நடந்தது பற்றியும் அவனிடம் சொல்லி யிருக்கிறீர்கள். அவன் எங்கள் ஊருக்குக் கடிதம் எழுதியிருக்கிறான். அக்கா! நீங்கள் ரொம்பப் படித்தவர்; எல்லாம் தெரிந்தவர். இருந்தாலும் இவரைப் பற்றிச் சூரியாவிடம் நீங்கள் இவ்வளவு கேவலமாகச் சொல்லியிருக்கக் கூடாது'' என்றாள் சீதா.

''ஐயோ! இது என்ன வீண் பழி? நான் என்ன உன் புருஷனைப்பற்றிக் கேவலமாகச் சொன்னேன்?''

''நான் ஏரியில் மூழ்கிக் கொண்டிருந்தபோது அவர் வேடிக்கை பார்த்துக்கொண்டு படகிலேயே இருந்தார் என்று சொன்னீர்கள். இதைக் காட்டிலும் வேறு என்ன சொல்ல வேண்டும்?''

தாரிணி சிறிது நேரம் மௌனமாயிருந்துவிட்டு, ''ஆமாம்; அப்படி நான் சொன்னது நிஜந்தான். புருஷர்களுடைய சுயநலத்தைப்பற்றி எங்களுக்குள் விவாதம் நடந்தது. அப்போது ரஜனிபூரில் நடந்தது பற்றிச் சொன்னேன். அது உண்மை தானே, சீதா! உண்மையை எதற்காக மறைக்க வேண்டும்?'' என்றாள்.

சீதா சிறிது வேகமான குரலில் ''என்னுடைய கொள்கை அதுவல்ல. உண்மையா யிருந்தாலும் ஒருவருடைய குற்றத்தை ஒருவர் சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. மூடி மறைத்துத்தான் கொண்டு போக வேண்டும்! இல்லாவிட்டால் இந்த உலகத்தில் வாழ்க்கையே நடத்த முடியாது!'' என்று சொன்னாள்.

தாரிணி மிக்க வியப்புடன் சீதாவைப் பார்த்தாள். படிப்பும் உலக அநுபவமும் அதிகம் இல்லாத இந்தச் சிறு பெண் இவ்வளவு முக்கிய விஷயத்தை எப்படிக் கண்டு பிடித்துச் சொன்னாள் என்று தாரிணிக்கு அதிசயமா யிருந்தது. அதோடு, ஏதேனும் உள் அர்த்தம் வைத்துப் பேசுகிறாளா என்றும் ஐயம் உண்டாயிற்று.

ஏதாவது சமாதானமாகப் பதில் சொல்ல வேண்டும் என்று தாரிணி எண்ணுவதற்குள், வாசலில் 'தட், தட், தட்' என்று மோட்டார் சைக்கிள் வரும் சத்தம் கேட்டது.

''போலீஸார் வந்துவிட்டார்கள்'' என்றாள் தாரிணி.

இருவரும் மற்ற விஷயங்களை எல்லாம் மறந்து, வாசலில் என்ன நடக்கப் போகிறதோ என்று கவலையுடன் சிந்திக்கத் தொடங்கினார்கள்.

## இருபத்தோராம் அத்தியாயம்

# 'ரஜனிபூர் பைத்தியக்காரி'

போலீஸார் வந்த பிறகு சற்று நேரம் வாசலிலேயே பேசிக் கொண்டிருந்தார்கள். சில நிமிஷங்களுக்கெல்லாம் ராகவனும் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரும் உள்ளே வந்தார்கள்.

ராகவன் தாரிணியைச் சுட்டிக் காட்டி, ''இந்தப் பெண்மணிதான்!'' என்று சொன்னான்.

''முகத்தைப் பார்த்தாலே தெரிகிறது. ரொம்பப் பயந்துபோ யிருக்கிறார். பயப்படக் காரணம் இல்லையென்று நான் சொல்லவில்லை. இருந்தாலும்........கையிலே இரத்தக் கறையைக் கூட இன்னும் கழுவவில்லை போலிருக்கிறதே!'' என்று போலீஸ் அதிகாரி கூறினார்.

''கழுவலாமோ, கூடாதோ என்று சந்தேகமா யிருந்தது. நீங்கள் வருவதற்குத்தான் காத்திருந்தேன்'' என்றாள் தாரிணி.

''குரல் எப்படி நடுங்குகிறது, பார்த்தீர்களா? இந்தப் பெண்மணியை உத்தேசித்துத்தான் போலீஸ் ஸ்டேஷனுக்கு நேரே கார் ஓட்டிக்கொண்டு



வரவில்லை. எப்படியாவது இவருடைய பெயரை இதில் சம்பந்தப் படுத்தாமல் இருந்தால் நல்லது. அதற்கு உங்களைத்தான் நம்பி யிருக்கிறேன்."

"என்னால் முடிந்தவரையில் பார்க்கிறேன். இவருடைய விலாசம் தெரியுமல்லவா? ஒரு வேளை இவருடைய சாட்சி தேவையா யிருந்தால்......?"

"தேவையா யிருந்தால், எப்போது சொன்னாலும் நானே அழைத்துக் கொண்டு வருகிறேன். ஆனால் அதற்குத் தேவை யில்லாமல் பார்த்துக் கொண்டால் நல்லது."

"பார்க்கலாம்!—நீ ஒன்றும் பயப்படாதே, அம்மா! போய்க் கைகளைச் சுத்தமாய் அலம்பிக்கொள். இந்த மாதிரி காரியங்களில் ஸ்திரீகள் தலையிடவே கூடாது. இது உனக்கு ஒரு பாடமா யிருக்கட்டும். இந்தச் சம்பவத்தைப் பற்றி யாரிடமும் பேசாதே! உனக்குத் தெரியும் என்பதாகவே காட்டிக் கொள்ளாதே?"

இவ்விதம் தாரிணியைப் பார்த்துச் சொல்லிவிட்டுப் போலீஸ் அதிகாரி ராகவனைப் பார்த்து "நாம் போகலாம், வாருங்கள்! இப்போதே ஒரு வேளை 'டூ லேட்' ஆகிப் போயிருக்கலாம்!" என்று சொன்னார்.

"சீதா! நான் போய் வருகிறேன். தாரிணி இன்றைக்கு இங்கேயே இருக்கட்டும்!" என்றான்.

போலீஸ் உத்தியோகஸ்தர் தாரிணியிடம் பேசியது சீதாவுக்கு அரைகுறையாகத்தான் புரிந்தது. தாரிணியை மட்டும் காப்பாற்றிவிட்டுத் தன்னுடைய கணவன் ஏதோ ஆபத்துக்கு உட்படப் போவதாக அவளுக்குத் தோன்றியது.

"எங்கே போகப் போகிறீர்கள்? நானும் உங்களுடன் வருகிறேன்!" என்று நடுங்கிய குரலில் கூறினாள்.

போலீஸ் உத்தியோகஸ்தர் இதற்குள் அவளுடைய பயத்துக்குக் காரணத்தைத் தெரிந்து கொண்டார்.



"இவர்தான் உங்கள் மனைவியா?... பயப்பட வேண்டாம், அம்மா! உன் புருஷனை நான் அரஸ்டு செய்து கொண்டு போகவில்லை. போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து ஒரு வாக்குமூலம் எழுதி வைக்க வேண்டும். அவ்வளவு தான். அரைமணி நேரத்தில் திரும்பி வந்து விடுவார்!" என்றார்.

அது உண்மைதானா என்று அறிந்து கொள்ள வேண்டிச் சீதா ராகவனுடைய முகத்தைப் பார்த்தான். அவன் சிறிது முகமலர்ச்சியுடனேயே, "ஆமாம், சீதா! எனக்கு ஆபத்து ஒன்றும் இல்லை. நானும் சூரியாவும் அரைமணியில் திரும்பி வந்துவிடுவோம். உனக்கு இன்னும் ஒன்றும் தெரியாதுபோலிருக்கிறது. தாரிணி! சீதாவிடம் சொல்லிவிடு! அவன் வீண் பீதி அடைந்திருக்கிறான்!" என்று சொல்லிவிட்டுப் போலீஸ் அதிகாரியைத் தொடர்ந்து போனான்.

சில நிமிஷத்துக்கெல்லாம் வாசலிலிருந்து மோட்டாரும் மோட்டார் சைக்கிளும் புறப்பட்டுச் சென்றன. சீதா வாசற் கதவைத் தாளிட்டுக் கொண்டு வந்தான்.

"இனிமேல் நான் இந்தக் காரில் ஏறவே மாட்டேன். என் குழந்தையையும் ஏறவிட மாட்டேன். காரை உடனே விற்றுவிட்டு வேறு வாங்க வேண்டியதுதான்!" என்றான்.

"ஆமாம்; இந்தக் காரில் என்னை ஏறச் சொன்னால் கூட இனிமேல் ஏற மாட்டேன். நீ இவ்வளவு தைரியமாயிருப்பதே எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது!" என்றாள் தாரிணி.

"என் மாமியார் இந்தச் சமயம் இங்கே இருந்திருந்தால் ஒரே ரகளையாகப் போயிருக்கும். அவருக்கு வேறே வைத்தியம் செய்யும்படி ஆகியிருக்கும். நல்ல வேளையாகக் குழந்தையும் தூங்கிப் போய்விட்டாள்."

"சீதா! உன் குழந்தையைப் பார்க்க எனக்கு ஆவலாயிருக்கிறது. முதலில் கைகளைக் கழுவிக் கொள்கிறேன்.

கை அலம்புவது மட்டும் என்ன? ஸ்நானமே செய்தாலும் நல்லதுதான்! குழாய்த் தண்ணீரில் ஸ்நானம் செய்தால் மட்டும் போதாது. கங்கைக்குப் போய் ஸ்நானம் செய்ய வேண்டும்!" என்று சொன்னான்.

"இப்போதைக்குக் குழாயில் ஸ்நானம் செய்து வையுங்கள். கங்கா ஸ்நானம் பிறகு பார்த்துக் கொள்ளலாம்" என்று சீதா சொல்லி, வீட்டின் முன் புறத்தில் இருந்த ஸ்நான அறைக்கு அழைத்துச் சென்றாள். வீட்டின் பின் பக்கம் போவதற்கே அவளுக்குத் தைரியம் வரவில்லை.

* * *

ராகவனும் சூரியாவும் திரும்பி வந்தபோது சீதாவும் தாரிணியும் சமையலறையில் ரொட்டி தயாரித்துக் கொண்டிருந்ததைப் பார்த்தார்கள். அவர்களுக்கு இந்தக் காட்சி மிகவும் சந்தோஷம் அளித்தது. "பசியே யில்லை" என்று அவர்கள் சத்தியம் செய்துவிட்டு, "நீங்கள் இவ்வளவு கஷ்டப்பட்டு ரொட்டி தயாரித்திருப்பதால் கொஞ்சம் சாப்பிடுகிறோம்" என்றார்கள். தாரிணி குளித்திருப்பதைப் பார்த்துவிட்டு அவர்களும் குளித்து வரச் சென்றார்கள்.

சூரியா கொல்லைப் பக்கத்து ஸ்நான அறைக்குப் போய் ஸ்நானம் செய்துவிட்டு வந்தான்.

"அத்தங்கா! ஸ்நான அறைக்கு எதிரே ஒரு அறை பூட்டிக் கிடக்கிறதே! அதில் என்ன இருக்கிறது? ஏதோ சத்தம் கேட்டது!" என்றான்.

சீதா முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு "பெருச்சாளி ஓடியிருக்கும்!" என்றாள்.

"இல்லை; உள்ளே யிருந்து யாரோ கதவைத் தட்டுவதுபோ லிருந்தது" என்றான் சூரியா.

"ஒருவேளை பூனை பிராண்டி யிருக்கும்" என்றாள் சீதா.

"தாரிணி! ஸ்நான அறையில் உங்கள் கைக்குட்டையைப் போட்டுவிட்டு வந்தீர்கள் போலிருக்கிறது. ஒரே இரத்தக் கறையா யிருந்தது! அதை நான் நன்றாக அலம்பி உலர்த்தினேன்!" என்று சொன்னான் சூரியா.

"இல்லையே! நான் போடவில்லையே!" என்று சொல்லித் தாரிணி சீதாவின் முகத்தைப் பார்த்தாள். சீதாவும் தாரிணியின் முகத்தைப் பார்த்தாள்.

"ஞாபக மறதியாய்ச் சொல்கிறீர்கள்!" என்றான் சூரியா.

சீதா பேச்சை மாற்ற விரும்பி, "இந்தக் காரை விற்றுவிட வேண்டும்; தெரியுமா? இனிமேல் நான் இந்தக் காரில் ஏறமாட்டேன்" என்றாள்.

"நான் அப்போதே தீர்மானித்து விட்டேன். நாளைக்கு முதல் காரியம் காரை விற்கப் போகிறேன். இரண்டாவது, ரிவால்வர் லைஸென்ஸ் வாங்கப் போகிறேன். காலம் எப்படிக் கெட்டுப் போய் விட்டது! சாலையோடு போகிற வனைக் குத்திக் கொல்வது என்றால்?... அதுவும் இந்தப் புது டில்லியில்?" என்றான் ராகவன்.

பிறகு எல்லாரும் வட்டமேஜையைச் சுற்றிச் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

"சீதா! உன் அம்மாஞ்சி இருக்கிறானே? அவன் மகா தைரியசாலி. காரிலே இருந்த போதெல்லாம் கை கால் நடுங்கிக் கொண்டிருந்தது. கீழே இறங்கியதும் பேச்சுப் பிரமாதம்!" என்றான் ராகவன்.

"நான் பயப்பட்டேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனாலும் உங்களைப்போல் தெருவில் ஒருவன் மரண காயம் பட்டுக் கிடக்கும்போது 'நமக்கென்ன?' என்று போகமாட்டேன்!" என்றான் சூரியா.

"போதும், போதும், இந்தப் பேச்சு! வேறு ஏதாவது பேசுங்கள்!"

"வேறு என்ன பேசுவது? நீதான் பேசேன்!" என்றான் ராகவன்.

"இவர்கள் இரண்டு பேரும் இத்தனை நாளாக ஏன் நம்முடைய வீட்டை எட்டிக்கூடப் பார்க்கவில்லை என்று கேளுங்கள்."

"எனக்கு ரொம்ப வேலை இருந்தது. அத்தங்கா! மன்னித்துக் கொள்! இனிமேல் அடிக்கடி வந்து கொண்டிருக்கிறேன். மாப்பிள்ளைக்கு ஆட்சேபம் இல்லாவிட்டால்......?"

"நீ வருவதில் எனக்கு என்ன ஆட்சேபம் இருக்க முடியும், சூரியா! நொண்டிச் சாக்குச் சொல்கிறாயா?"

"அப்படிக் கேளுங்கள் நன்றாய்! சூரியா! நீ வருவதில் மாப்பிள்ளைக்கு எதற்காக ஆட்சேபம்? வேலையாம் வேலை! இந்த அக்காவைப் பார்க்கப் போவதற்கு உனக்கு மட்டும் வேலை ஒழிந்ததோ?"

"அத்தங்கா! இவரும் நானும் ஒரே கட்சியைச் சேர்ந்தவர்கள். ஆகையால் வேலை நிமித்தமாகவே நாங்கள் சந்திக்க வேண்டியிருக்கிறது."

"அது என்ன கட்சியோ, காட்சியோ? எனக்குத் தெரியாது! நீங்கள் இரண்டு பேரும் இனிமேலாவது இங்கே அடிக்கடி வந்து கொண்டிருந்தால் எனக்குத் திருப்தியாயிருக்கும்."

"நான் வந்திருப்பேன், சீதா! உண்மைக் காரணத்தை இப்போது சொல்லி விடுகிறேன். உன் மாமியாருக்குப் பயந்து கொண்டுதான் வரவில்லை!" என்று தாரிணி கூறினாள்.

"என் மாமியாரைக் கண்டு எதற்காக நீங்கள் பயப்பட வேண்டும்? நானே பயப்படுவதில்லையே? அவரைப் பற்றிச் சூரியா ஏதாவது இல்லாததும் பொல்லாததும் சொல்லியிருக்கிறான் போலிருக்கிறது! என் மாமியாரைப் போன்ற நல்ல மாமியாரை இந்தப் பூவுலகத்திலேயே காணமுடியாது. பெற்ற பெண்ணுக்கு மேலாக என்னிடம் பிரியமாயிருக்கிறார்!"

அந்தச் சமயம் சீதாவிடம் ராகவனுடைய அன்பு பரிபூரணமடைந்தது. அன்பு மட்டுமா? நன்றியுங் கூடத்தான். 'இப்போது என்ன சொல்கிறாய்?' என்ற பாவனையாகத் தாரிணியை ராகவன் பார்த்தான். தாரிணியும் ராகவனைப் பார்த்தாள். அவர்கள் கண்களின் மூலமாகப் பேசிக்கொண்டதைச் சீதா கவனிக்கவில்லை. கவனித்திருந்தாலும் அந்த நயன பாஷையின் பொருள் அவளுக்கு விளங்கியிராது.

சாப்பிட்டு முடிந்து எல்லோரும் டிராயிங் அறைக்கு வந்ததற்கும் டெலிபோன் மணி அடித்ததற்கும் சரியாயிருந்தது. ராகவன் ரிஸீவரை எடுத்துக்கொண்டு பேசினான்.

"ஓகோ! உயிர் போய்விட்டதா? அடாடா!......என்ன? 'கத்திக் காயத்தினால் மரணம்' என்று டாக்டர் சர்டிபிகேட் கொடுத்திருக்கிறாரா? ரொம்ப சரி!—யார்? விநாயக ராவ் மஹாராஷ்டிரரா?......உலகத்துக்கு ஒரு நஷ்டமுமில்லை!......ஆனாலும் கொலை, கொலைதானே? காரை நாளைக்கே விற்றுவிடப் போகிறேன்......யாராயிருக்கும்? ஏதாவது ஊகம்......? ரஜனிபூர் பைத்தியக்காரியா? கேள்விப்பட்டதில்லை!......சரிசரி! நான் பார்த்துக்கொள்கிறேன். வந்தனம்!"

இவ்விதம் ராகவன் பேசியபோது அதைக் கேட்டுக் கொண்டிருந்த மூன்று பேரின் உள்ளங்களும் ஒரே கலக்கத்துக்கு உள்ளாகியிருந்தன.

டெலிபோன் ரிஸீவரை ராகவன் வைத்ததும் ஏககாலத்தில் மூன்று பேரும் "என்ன? என்ன?" என்று பரபரப்புடன் கேட்டார்கள்.



மயிலை கபாலி கோவில் தர்மகர்த்தா, ஸ்ரீ A. பார்த்தசாரதி முதலியார் அவர்களின் மருமகனும், காட்டுப்பள்ளி ஸ்ரீ K. நரசிங்க முதலியார் குமாரருமாகிய செஞ்சீவி K. N. ஷண்முக சுந்தரத்திற்கும், ஸ்ரீ T. மலையப்ப முதலியார் அவர்களின் குமாரி சௌபாக்கியவதி கோமதிக்கும் சென்ற மாதம் 9-ம் தேதி மயிலாப்பூரில் வெகு சிறப்பாக திருமணம் நடந்தேறியது.

வாழ்க, கோமதி — ஷண்முக சுந்தரம்

"அந்த விஷயமாகத்தான் சீதா பேசவே கூடாது என்கிறாளே?"

"பரவா யில்லை; சொல்லுங்கள். சாப்பிடும் போதுதானே அந்தப் பேச்சு வேண்டாம் என்று சொன்னேன்" என்றாள் சீதா.

"அப்படியானால் கேட்டுக்கொள். ஆஸ்பத்திரியில் நாங்கள் கொண்டு போய் விட்ட அரைமணிக்குள் உயிர் போய்விட்டதாம். கத்திக் குத்தினால் சாவு என்று டாக்டர் சர்டிபிகேட் கொடுத்திருக்கிறாராம். கொலையுண்டு செத்துப் போனவனின் பெயர் விநாயக ராவ் மதோங்கர். ரஜனிபூரில், பழைய ரஜனிபூர் மகாராஜாவின் துர்மந்திரி என்று சொன்னேனே; அவன்தான். கொஞ்ச நாளாக இந்த ஊரில் இருந்தானாம். கிளப்பில் ரொம்பப் பேருக்கு அவனைத் தெரியுமாம். குடித்துவிட்டு ரகளை செய்வானும். ரஜனிபூர் பைத்தியக்காரி என்று பெயர் பெற்ற ஒரு ஸ்திரீ அவனைச் சிலநாளாக அடிக்கடி தொடர்ந்து போய்க் கொண்டிருந்தாளாம். போலீஸில் கூட மதோங்கர் புகார் செய்திருந்தானும். ஏற்கெனவே ரஜனிபூர் மகாராஜாவைக் கொல்ல முயற்சித்தவளாம். இவனைக் கொன்றவளும் அவளாய்த்தான் இருக்கும் என்று ஊகிக்கப் படுகிறதாம். போதுமா? எத்தனையோ துப்பறியும் கதைகள் எல்லாம் படித்திருக்கிறோம். அவற்றையெல்லாம் இந்த உண்மைச் சம்பவம் தோற்கடித்து விடுகிறதா, இல்லையா? ஏன் எல்லாரும் இப்படி மௌனம் சாதிக்கிறீர்கள்? சீதா, உனக்குத் துப்பறியும் கதைகள் ரொம்பப் பிடிக்குமே?"

'ரஜனிபூர் பைத்தியக்காரி' என்றதும் சீதாவும் தாரிணியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். இரண்டு பேருடைய பார்வையும் பயங்கரத்தையும் பரிதாபத்தையும் வெளியிட்டன.

சீதாவைக் கூப்பிட்டு ராகவன் குறிப்பாகக் கேட்டதும், "இந்த மாதிரி விஷயமெல்லாம் கதையோடு இருந்தால் நன்றாயிருக்கும்! உண்மையில் நடக்கக் கூடாது!" என்றாள்.

"எனக்கு என்ன தோன்றுகிறது தெரியுமா? ரஜனிபூர் பைத்தியக்காரியைப்போல் இன்னும் பலர் தோன்ற வேண்டும். அப்போதுதான் நம் நாட்டுச் சுதேச ராஜாக்களுக்கும் அவர்களுடைய துர்மந்திரிகளுக்கும் புத்தி வரும்!" என்றாள் சூரியா.

"சுதேச ராஜாக்களிடம் உனக்கு என்னடா, அப்பா, அவ்வளவு கோபம்?" என்றான் ராகவன்.

அவர்களுக்குள் விவாதம் நடந்த போது சீதாவின் மனமெல்லாம் கொல்லைப்புறத்துப் பூட்டிய அறையிலேயே இருந்தது. 'ரஜனிபூர் பைத்தியக்காரி' என்பவள் அந்த வீட்டிலேயே அப்போது! இருக்கிறாள்! அதைதான் அங்குள்ளவர்கள் யாரிடமாவது சொல்லவேண்டுமா? சொன்னால் என்ன விபரீதம் வருமோ? சொல்லா விட்டால் என்ன விபரீதம் நேருமோ? தாரிணியின் சொந்தத் தாயாரோ அல்லது வளர்ப்புத் தாயாரோ அவள்! தன் தாயார்தான் கொலைகாரி என்பது தாரிணிக்குத் தெரிந்தால் எப்படியிருக்கும்? ஒரு வேளை தெரிந்தேயிருக்குமோ? அவளைப் பார்த்துத் தன் பெற்றோர்கள் யார் என்பதைத் தாரிணி தெரிந்து கொள்ள விரும்பினாள் அல்லவா? அதற்கு இனிமேல் சந்தர்ப்பம் கிடைக்குமா? — தாரிணியின் உண்மைத் தாயார், அந்தப் பைத்தியக்காரிதான்! இப்படிப்பட்ட காரியம் செய்ய உத்தேசித்திருந்தபடியினால் தாரிணியின் மனம் நோகாமலிருக்கும் பொருட்டு வளர்ப்புத் தாயார் என்று பொய் சொல்லியிருப்பாள்.—இந்த உண்மையைத் தான் கண்டு பிடித்து ஏன் தாரிணிக்குச் சொல்லக் கூடாது?

சட்டென்று இன்னொரு விஷயம் சீதாவுக்கு ஞாபகம் வந்தது. அந்தப் பைத்தியக்காரி தன்னிடமும் தன் தாயாரிடமும் எதற்காக அவ்வளவு அபிமானம் காட்டினாள்? எதற்காகத் தனக்கு ரத்தின ஹாரமும் பணமும் கொடுத்தாள்?—இதன் காரணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்னும் ஆசை சீதாவின் மனதில் மற்ற எல்லா எண்ணங்களையும் அடக்கிக்கொண்டு மேலெழுந்தது. அதோடு, அந்தக் கொலைகாரி அளித்த ரத்தினமாலையை இனிமேல் தான் அணிந்து கொள்ளக் கூடாது என்ற எண்ணமும் உதித்தது.

# ஆகாரத்திற்கு பின் வயிற்று நோயா?

இதுதான் நான் சிபார்சு செய்வது



வயிற்றில் அதிக அமிலம் சேருவதால் அடிக்கடி அஜீரண உபாதைகள் ஏற்படலாம். இந்த அதிக அமில சேர்ப்பினால் ஏற்படும் எரிச்சல், வாயு, இதர உபாதைகள்; அதிர்வாய் ஆகாரத்திற்குப் பின் வயிற்று நோய் முதலியவைகளுக்கு உலகம் அறிந்த டாக்டர் தனிப்பட்ட "பிஸ்மாக்"கை சிபார்சு செய்கிறேன். அமில சேர்க்கையால் வயிற்று நோயால் தவிப்பவர்களுக்கு உடனேயே "பிஸ்மாக்" நிவாரணமளிக்கும். இன்றே ஒரு முறை பரிசோதித்து உங்கள் வயிற்றை சகல உபாதைகளிலிருந்தும் தடுத்துக் கொள்ளுங்கள்.

உங்களுக்கு வேண்டியது

**BISMAG**

எல்லா கெமிஸ்டுகளிடமும் ஸ்டோர்களிலும் பவுடராகவும் மாத்திரையாகவும் கிடைக்கும்.

ஸோல் ஏஜண்டுகள்:

ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்

பம்பாய்-கல்கத்தா-மதராஸ்-லாகூர்

உங்கள் தீபாவளிப் பண்டிகைக்கு உகந்தது

# ஆரணி பட்டுச் சேலைகள்

எங்கள் சொந்தக் கைத்தறியில் தயார் செய்யப்பட்ட இச் சேலைகள் அதன் அற்புத வேலைப் பாட்டிற்கும், நவீன டிஸைன்களுக்கும், கெட்டிச் சாயத்திற்கும் பிரசித்தமானவை. நேரில் ஒரு முறை விஜயம் செய்து உங்கள் தீபாவளித் தேவைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவும்.

## ஆரணி ஸில்க் ஹவுஸ்

நெ. 4, ஸன்னிதி தெரு, மயிலாப்பூர்

(போன் நெ. 86349)



தென் இந்தியர்களின் சவுகரியத்தை உத்தேசித்து கீழ் கண்ட இடங்களிலும் எங்கள் பட்டுச் சேலைகள் விற்பனை செய்யப் படுகிறது.

- சவுத் இண்டியன் கன்சேர்ன்ஸ், மதுங்கா - பம்பாய்
- கோமள விலாஸ், 73, ராஷ்பிஹாரி அவின்யூ, கல்கத்தா
- சவுத் இண்டியன் கிளப் கோவாபரேடிவ் சப்ளை சொஸைடி, புது டில்லி
- கோபரேடிவ் ஸ்டோர்ஸ், ஜாம்ஷெட்பூர்
- M.S. சேஷன், 10, K. ரோட், ஜாம்ஷெட்பூர்

# ரேடியோவில் பாட வேண்டுமா?

இந்தக் காலத்தில் சங்கீதக் கலைக்கு நல்ல செல்வாக்கு இருக்கிறது. பத்துப் பதினைந்து உருப்படிகள் சுமாராகப் பாடத் தெரிந்தவர்களுக் கெல்லாம் ரேடியோவில் 'சான்ஸ்' கிடைக்கிறது.

பல நடுத்தரக் குடும்பங்களில் குழந்தைகள் சங்கீதம் கற்றுக் கொள்ளுகிறார்கள். 'டியூஷன்' வைத்துக் கற்றுக் கொள்ளுகிறார்கள். கேள்வி ஞானத்தினாலேயே சிலர் சங்கீதத் தேர்ச்சி அடைந்து விடுகிறார்கள்.

டியூஷன் வாத்தியார்கள் பல பாட்டுக்களைத்தான் சொல்லிக் கொடுக்கிறார்கள். ஆனால் சாஹித்யம் சரிவரச் சொல்லிக் கொடுப்பதில்லை. சாஹித்யத்திலும் சங்கதிகளிலும் அவர்களுக்கு நிச்சயம் இருப்பதில்லை. இதனால் அவர்களிடம் சங்கீதம் கற்றுக் கொள்ளுகிறவர்கள் பாடுவதிலும் பிழைகள் மலிந்திருக்கின்றன.

இத்தகைய பிழைகளுக்கு ஏன் இடங் கொடுக்க வேண்டும்? ரேடியோவிலே கேட்டுவிட்டு நாலு பேர் நாலு எதற்காகச் சொல்ல வேண்டும்?

அது மட்டுமல்ல; சாஹித்யம் சரியா தவறா என்றும், உச்சரிப்பில் பிழை யிருக்கிறதா இல்லையா என்றும் பாடுகிறவர்களுக்குச் சந்தேகம் வந்து விடுகிறது. ஆகையால் சில சமயம் வார்த்தைகளை மென்று விழுங்குகிறார்கள். இது கேட்பவர்களுக்கு அருவருப்பை அளிக்கிறது.

இந்த மாதிரி குறைகளுடன் பாட வேண்டிய அவசியம் இனிமேல் இல்லை. அவசியமில்லாதபடி செய்வதற்கு அருமையான புத்தகங்கள் நான்கு வந்திருக்கின்றன.

"கிருதி மணி மாலை" நாலு பாகங்களையுந்தான் குறிப்பிடுகிறோம். முதல் பாகத்தில் 101 தியாகய்யர் கீர்த்தனங்களும், இரண்டாம் பாகத்தில் 145 தியாகய்யர் கீர்த்தனங்களும், மூன்றாம் பாகத்தில் 150 தியாகய்யர் கீர்த்தனங்களும், நாலாம் பாகத்தில் 96 தீக்ஷிதர், - சாமா சாஸ்திரி கீர்த்தனங்களும் 44 க்ஷேத்ரக்ஞர் பதங்களும் அடங்கியிருக்கின்றன.

சாஹித்யம் தமிழிலும் தெலுங்கிலும் அச்சிடப்பட்டிருக்கிறது. விளக்கமாகப் பொருள் எழுதப்பட்டிருக்கிறது.

பழமையான, கர்நாடக சுத்தமான முறையில், யாரும் குற்றம் கண்டுபிடிக்க முடியாத பாணியில், கீர்த்தனங்களை ஸ்வரப்படுத்தியிருக்கிறது.

இந்த நாலு புத்தகங்களையும் அருமையான சங்கீத பொக்கிஷம் என்று சொல்லலாம். சங்கீத அபிமானமுள்ள ஒவ்வொரு குடும்பத்திலும் இருக்க வேண்டியவை.

சங்கீதம் கற்றுக் கொள்ளும் குழந்தைகளுக்கும் ரேடியோவில் பாடுகிறவர்களுக்கும் மட்டுந்தான் இந்த நூல்கள் உபயோகமானவை என்று நாம் சொல்வதாக நேயர்கள் எண்ணக் கூடாது.

இந்த நூல்களின் மூலம் ஸ்ரீ ரங்க ராமானுஜ அய்யங்கார் பி. ஏ. எல். டி. கர்நாடக சங்கீத உலகத்துக்கு ஓர் அற்புதமான தொண்டு செய்திருக்கிறார். ஸ்ரீ தியாகராஜருக்கு இணையில்லாத சேவை புரிந்திருக்கிறார். வருங்கால சந்ததிகள் எல்லாம் மகிழ்ந்து வாழ்த்தும்படியான பகவத் கைங்கரியம் இயற்றியிருக்கிறார்.

விலை விவரம்:—முதற்பாகம் ரூ. 6-8-0: இரண்டாம் பாகம் ரூ. 9-8-0; மூன்றாம் பாகம் ரூ. 9-8-0; நாலாம் பாகம் ரூ 10.

புத்தகம் கிடைக்கும் இடம்:—ஸ்ரீ ரங்க ராமானுஜ அய்யங்கார், சபர்மதி, செட் காலனி, எழும்பூர், சென்னை.

## "இந்தியன்" வருகை

"சாவி" என்ற புனை பெயர் பூண்ட ஸ்ரீ எம். என். விசுவநாதனின் எழுத்துத் திறமை தமிழ் நாட்டில் பலரும் அறிந்ததே. "வெள்ளி மணி" என்னும் பத்திரிகையைச் சில மாத காலத்தில் மிக உன்னத நிலைமைக்கு அவர் கொண்டுவந்தார். ஆயினும், சில்லரை கோளாறுகளினால் "வெள்ளி மணி" நின்றுவிட நேர்ந்தது. இப்போது "இந்தியன்" என்னும் மாதம் இரு முறைப் பத்திரிகையைச் "சாவி" வெளியிடத் தொடங்கி யிருக்கிறார். அக்டோபர் 2-ந் தேதி 15-ந் தேதி இதழ்கள் இரண்டும் வெளியாகியிருக்கின்றன. திறமையான முறையில் நல்ல பத்திரிகைக்கு வேண்டிய பல அம்சங்களுடன் மேற்படி இரண்டு இதழ்களும் விளங்குகின்றன. தமிழ் மக்களின் பூரண ஆதரவை "இந்தியன்" பெறுவான் என்று நம்புகிறோம்.

வருஷ சந்தா ரூ. 3; தனிப் பிரதி விலை அணா 2. விலாசம்: "இந்தியன்", புதுமனை வெளியீடு, மேற்கு மாம்பலம், சென்னை.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

ரா.கி.

## 50. முதல் தண்டனை

1907-ம் வருஷம் ஜூலை மாதம் முதல் தேதி வந்தது. அன்று டிரான்ஸ்வால் எங்கும் இந்தியர்கள் பெயரைப் பதிவுசெய்து கொண்டு அநுமதிச் சீட்டுப் பெறும் காரியாலயங்கள் திறக்கப்பட்டன. இந்தக் காரியாலயங்களுக்கு அருகில் சத்தியாக்கிரஹத் தொண்டர்கள் நிறுத்தி வைக்கப்பட்டார்கள். விஷயம் தெரியாததினாலோ அல்லது பயத்தினாலோ பதிவு செய்து கொள்ள வரும் இந்தியர்களுக்குச் சாத்வீக முறையில் எச்சரிக்கை செய்வதற்காகவே தொண்டர்கள் நிறுத்திவைக்கப்பட்டார்கள். தொண்டர்களுக்கென்று தனியாக ஒரு அடையாளம் கொடுக்கப் பட்டிருந்தது. முரட்டுத்தனமாகவோ அவமரியாதையாகவோ பேசக் கூடாதென்றும், லவலேசமும் பலாத்காரத்தைக் கையாளக் கூடாதென்றும் தொண்டர்களுக்குக் கண்டிப்பாகச் சொல்லப் பட்டிருந்தது. கறுப்புச் சட்டத்துக்கு உட்படுவதால் இன்னின்ன தீமைகள் விளையும் என்பதைக் கூறும் அச்சுப் பிரசுரத்தைக் கொடுத்து விட்டு, அதில் கண்ட விவரங்களை விளக்கிச் சொல்வதே தொண்டர்களின் கடமை. இந்தக் கடமையை நிறைவேற்றுவதில் போலீஸார் தலையிட்டுத் தொண்டர்களை வைதாலும் அடித்தாலும் தொண்டர்கள் பொறுமையாகப் பொறுத்துக் கொள்ள வேண்டும். அப்படிப் பொறுக்க முடியாமற் போய்விட்டால் அங்கிருந்து அப்புறம் போய்விட வேண்டும். போலீஸார் கைது செய்தால் சந்தோஷமாகச் சிறைக்குப் போக வேண்டும்.

இவ்விதமாக, சாத்வீக மறியல் என்னும் ஆயுதமானது 1907-ம் வருஷத்திலேயே காந்திஜியினால் உருவாக்கப்பட்டது. இந்த ஆயுதத்தைக் காந்திஜி பிற்காலத்தில் இந்தியாவில் பற்பல துறைகளிலும் உபயோகப்படுத்தினார். கள்ளுக் கடை மறியல், விதேசி துணிக் கடை மறியல் முதலியவை நடந்தன. இந்தச் சாத்வீக மறியல் முறையினாலேயே இந்தியா சுதந்திரம் அடைந்தது என்று சொல்வது மிகையாகாது.

ஆனால் தென்னாப்பிரிக்காவில் இந்த முறையை ஆரம்பித்தபோது அது முற்றும் புதுமையாயிருந்தபடியால் பல தொல்லைகள் ஏற்பட்டன. "வெறுமனே 'அப்பா, ஐயா!' என்று கெஞ்சினால் யார் கேட்பார்கள்?" என்று எண்ணிய இந்தியர்கள் சிலர் இருந்தார்கள். இவர்கள் இரகசியமாகப் பயமுறுத்தல் முறைகளைக் கையாண்டார்கள். பயமுறுத்தலுக்கு உள்ளானவர்கள் உடனே சர்க்காரின் பாதுகாப்பைக் கோரினார்கள். சர்க்காரின் பாதுகாப்பு உடனே கிடைத்தது. இது காரணமாக இந்திய சமூகத்தில் பலவீனமும் பிளவும் ஏற்பட்டன. சில பிரபல வியாபாரிகள் இராத்திரி பத்து மணிக்கு மேலே பதிவுக் காரியாலயங்களுக்குச் சென்று பதிவு செய்து கொண்டார்கள். இம்மாதிரி சுமார் ஐந்நூறு இந்தி-

யர்கள் வரையில் பதிவு செய்து கொண்டு அனுமதிச் சீட்டுப் பெற்றார்கள்.

ஆனால் டிரான்ஸ்வால் சர்க்கார் இதனால் திருப்தி அடையவில்லை. சட்டம் அமுலுக்கு வந்து சில மாதங்கள் ஆகியும், சுமார் பன்னிரண்டாயிரம் இந்தியர்களில் ஐந்நூறு பேர்தான் புதிய சட்டத்துக்கு உட்பட்டார்கள் என்பது சர்க்காருக்கு அவமானந் தரும் நிலைமை அல்லவா? ஆகவே அடக்கு முறையைக் கையாள வேண்டியதுதான் என்று அதிகாரிகள் தீர்மானித்தார்கள்.

முதன் முதலில் அத்தகைய அதிர்ஷ்டம் கிடைக்கப் பெற்றவரின் பெயர் **பண்டித ராமசுந்தரம்.** இவர் வட இந்தியர். பிரசங்கத் திறமை வாய்ந்தவர். சம்ஸ்கிருத சுலோகங்களும் துளசிதாஸ் ராமாயணப் பாடல்களும் சொல்லக் கூடியவர். ஜெர்மிஸ்டன் என்னுமிடத்தில் இவர் இருந்தார். அந்த ஊரில் வசித்த இந்தியர்களிடையில் மிக்க செல்வாக்குப் பெற்றிருந்தார். அந்த ஊரிலிருந்த இந்தியர்கள் இவராலேதான் பதிவு செய்து கொள்ள முன்வரவில்லையென்று அதிகாரிகள் கருதி இவரைக் கைது செய்தார்கள். கோர்ட்டில் விசாரணை நடந்து ஒரு மாதம் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. தென்னாப்பிரிக்கா முழுவதும் இவருடைய பெயர் பிரசித்தியாயிற்று. இந்தச் சம்பவத்தின் பயனாக இந்தியர்களின் உறுதியும் உற்சாகமும் அதிகமாயினவே தவிரக் குறையவில்லை. நூற்றுக்கணக்கான இந்தியர்கள் சிறைக்குப் போகத் தயாரானார்கள். ஜெர்மிஸ்டனில் ஒரு இந்தியர் கூடப் பதிவு செய்து கொள்ளவில்லை.

அதிகாரிகளின் கோபம் அதிகமாயிற்று. ஜோகானிஸ்பர்க்கில் இருந்து இயக்கத்தை நடத்தி வைத்த முக்கியமான தலைவர்கள் பேரில் நடவடிக்கை எடுத்தாலன்றிச் சட்டத்தை அமுல் நடத்த முடியாது என்று தீர்மானித்தார்கள். எனவே சில முக்கியமான இந்தியத் தலைவர்களைப் பொறுக்கி எடுத்து, 1907-ம் வருஷம் டிசம்பர் 28உ கோர்ட்டில் ஆஜராகி, அவர்கள் பேரில் ஏன் நடவடிக்கை எடுக்கக்கூடாது என்பதற்குக் காரணம் காட்டவேண்டும் என்று உத்திரவு பிறப்பித்தார்கள்.

இப்படிப் பொறுக்கி எடுக்கப்பட்ட தலைவர்களில் காந்திஜி ஒருவர் என்று சொல்ல வேண்டியதில்லை. இன்னொருவர் **குவின்** என்னும் சீனர். இந்தியர்களைப் போலவே சீனர்களும் கறுப்புச் சட்டத்துக்கு உட்படுத்தப் பட்டார்கள். ஆகையால் சீனர்களும் சட்டமறுப்பு இயக்கத்தில் சேர்ந்திருந்தார்கள்.

இன்னொரு தலைவர் பெயர் **தம்பி நாயுடு.** இவருடைய பெற்றோர்கள் தமிழ்நாட்டிலிருந்து மோரிச் என்னப்படும் மொரீஷஸ் தீவுக்குச் சென்று குடியேறியவர்கள். அந்தத் தீவில் பிறந்தவர் தம்பி நாயுடு. இந்தியா தேசத்தை அவர் பார்த்ததே யில்லை. ஆயினும் தாய்நாடாகிய இந்தியா மீது அவர் கொண்டிருந்த பக்திக்கு அளவே யில்லையென்று காந்தி மகாத்மா எழுதியிருக்கிறார். இன்னும் அவருடைய குணாதிசயங்களைப் பற்றி மிக வியந்து எழுதியிருக்கிறார். இங்கிலீஷ், தமிழ், தெலுங்கு, ஹிந்துஸ்தானி முதலிய பல பாஷைகள் தம்பி நாயுடுவுக்குத் தெரியுமாம். கிரியோ பாஷை கூடத் தெரியுமாம். எந்த வேலையையும் மட்டமானது என்று அவர் நினைக்க மாட்டாராம். பொதுக் கூட்டத்துக்குத் தலைமை வகிக்க நேர்ந்தாலும் வகிப்பாராம். தலையில் மூட்டை தூக்கிக் கொண்டு சாலையில் போக வேண்டி வந்தாலும் போவாராம். சமூகத்துக்காகச் சர்வ பரித்தியாகமும் செய்வதற்குத் தயாராயிருந்தாராம். இரவு பகல் என்று பாராது பொது வேலைகளில் ஈடுபடுவாராம். "தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரக இயக்கத்தின் சரித்திரத்தில் தம்பி நாயுடுவின் பெயர் எப்போதும் நிலை பெற்றிருக்கும்" என்கிறார் காந்தி மகான்.

குறிப்பிட்ட தினத்தில் 'நோட்டீஸ்' கிடைத்தவர்கள் எல்லாரும் கோர்ட்டுக்குப் போனார்கள். யாரும் எதிர்வழக்கு ஆடவில்லை. ஆகவே, 'இரண்டு வாரத்திற்குள் அவர்கள் கறுப்புச் சட்டத்தின்படி பதிவு செய்து கொள்ள வேண்டும், அல்லது டிரான்ஸ்வாலை விட்டுப் போய்விடவேண்டும்' என்று மாஜிஸ்ட்ரேட் தீர்ப்பு அளித்தார்.

ஆனால் அந்தத் தீர்ப்பின்படி ஒருவரும் பதிவுசெய்து கொள்ளவும் இல்லை; டிரான்ஸ்வாலை விட்டுப் போகவும் இல்லை. 1908-ம் வருஷம் ஜனவரி 10-ம் தேதி தவணை தீர்ந்தது. அன்று எல்லோரும் மறுபடியும் கோர்ட்டுக்கு வரவழைக்கப் பட்டார்கள். மாஜிஸ்ட்ரேட்டின் உத்திரவை மீறிய குற்றத்தைச் செய்ததாக எல்லாரும் ஒப்புக் கொண்டார்கள்.

கோர்ட்டில் இந்த விசாரணை ஆரம்பமாகிக் கொண்டிருந்த சமயத்தில் பிரிட்டோரியாவிலிருந்து ஒரு செய்தி வந்தது. அங்கேயும்

சில இந்தியத் தலைவர்கள் இதே மாதிரி விசாரணை செய்யப்பட்டு மூன்று மாதம் கடுங்காவல் தண்டனையும் அதைத் தவிரப் பெருந் தொகை அபராதமும் விதிக்கப்பட்டனர் என்று தெரிந்தது. உடனே காந்திஜி தாம் ஒரு வாக்குமூலம் கொடுக்க விரும்புவதாகவும் அதற்குக் கோர்ட்டார் அநுமதி கொடுக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

இதுவரை ஒன்றுமே சொல்வதற்கில்லை யென்று சொல்லிவந்த காந்திஜி இப்போது வாக்குமூலம் கொடுப்பதாகச் சொன்னதும் மாஜிஸ்ட்ரேட்டுக்குச் சிறிது வியப்பாயிருந்தது. ஒருவேளை, காந்திஜி பயந்துபோய்ப் பணிந்து விடுவதாகச் சொல்லப் போகிறாரோ என்று எண்ணினார். அவருடைய கோரிக்கையின்படி வாக்குமூலம் கொடுக்க அநுமதி தந்தார். காந்திஜியின் சகாக்களும் மற்றும் விசாரணையைக் கவனிப்பதற்காகக் கோர்ட்டில் கூடியிருந்த நூற்றுக் கணக்கான இந்தியர்களும் "காந்திஜி என்ன சொல்லப் போகிறாரோ!" என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

காந்திஜி கொடுத்த வாக்குமூலத்தின் சாராம்சம் இதுதான் :—"கறுப்புச் சட்டத்துக்கு இந்தியர்கள் உட்படக்கூடாது என்கிற இயக்கத்தை ஆரம்பித்தவனும் அதற்குத் தலைமை வகித்து இதுவரை நடத்தி வந்தவனும் நான். ஆகையால் சட்டத்தை மீறிய மற்றவர்களைக் காட்டிலும் எனக்கு அதிகமாகவும் கடுமையாகவும் தண்டனை கொடுக்கும்படி கோர்ட்டாரைக் கேட்டுக் கொள்கிறேன்."

இதைக் கேட்ட மாஜிஸ்ட்ரேட் திணறிப் போனார். காந்திஜியைத் தண்டிக்க அவருக்கு மனம் வரவில்லை; தண்டியாமலிருக்கச் சட்டம் இடந்தரவில்லை. எனினும், காந்திஜியின் கோரிக்கையை நிறைவேற்ற அவர் மறுத்து இரண்டு மாதம் வெறுங் காவல் தண்டனை அளித்தார்.

அவ்விதம் தீர்ப்பு அளிக்கப்பட்டவுடனே காந்திஜியைப் போலீசார் சூழ்ந்து சிறைச் சாலைக்குக் கொண்டு போனார்கள்.

இவ்விதமாக, 1901-ம் வருஷம் ஜனவரி மீ 10உ உலக சரித்திரத்தில் ஒரு புதிய சகாப்தம் ஆரம்பமாயிற்று.

---

## பாரதத் தாயின் புதல்விகள்

"யாரும் வகுத்தற்கரிய பிராயத்தள் ஆயினுமே எங்கள் தாய் — இந்தப்
பாருள் எந்நாளுமோர் கன்னிகை யென்னப் பயின்றிடுவாள் எங்கள் தாய்!"



அத்தகைய பாரதத் தாயின் திவ்விய வடிவத்தை அவளுடைய அருமைப் புதல்விகள் சிலர் தத்ரூபமாகச் சித்திரித்துக் காட்டும் காட்சியை இங்கே காணலாம். திருவல்லிக்கேணி தேசியப் பெண்கள் பாடசாலையின் மாணவிகள் இந்தக் குழந்தைகள். ஆயிரம் பெண்கள் அருமையான முறையில் பயிற்சி பெற்று வரும் இந்தப் பள்ளிக்கூடத்திற்கு நல்ல முறையில் சொந்தக் கட்டிடம் கட்டத் தொடங்கி, நிதியில்லாக் குறையினால் நடுவில் நின்று போயிருக்கிறது. கட்டிடத்தைப் பூர்த்தி செய்யும் தொண்டுக்கு உங்களால் ஆன உதவியைச் செய்யக் கோருகிறோம். கட்டிடப் பூர்த்தி நிதிக்காக ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் உதவிக்கச்சேரி விரைவில் நடைபெறப் போகிறது.

# இதுவும் ஒரு கதையா!

வி. பாலசுப்ரமண்யம்

"நாசமாய்ப் போக! எவ்வளவு சொன்னாலும் மூளையில்லை.....!" என்று பக்கத்து வீட்டுக்காரர் இரைந்து கத்திக்கொண்டிருந்தார்.

[கதை என்ன, இவ்வளவு நல்ல வார்த்தைகளுடன் ஆரம்பிக்கிறதே என்று பார்க்கிறீர்களா? இந்தப் பக்கத்து வீட்டுக்காரர்களே இப்படித்தான். எதாவது கத்திக்கொண்டிருப்பார்கள். பரவாயில்லை, மேலே படியுங்கள்.]

டாக்டர் பட்டம் பெற்றபின் 'பிராக்டிஸ்' செய்வதற்காக அன்றுதான் நான் அவ்வூருக்கு வந்திருந்தேன்.

"......உன்னை என்ன செய்கிறேன், பார்!" என்று அவர் தொடர்ந்து கத்திக்கொண்டிருந்தார். உள்ளே ஒரு பெண் முனகும் சத்தம் கேட்டது. என்னதான் நடக்கிறதென்பதைப் பார்க்க, நான் அவர் வீட்டினுள் நுழைந்து, "என்ன ஸார், விஷயம்?" என்றேன்.

"உங்களுக்கென்ன, ஸார்? நீங்கள் உங்கள் வழியே போங்கள்!" என்று கடுகடுத்த முகத்துடன் அவர் பதில் சொன்னார். "இல்லை ஸார்...வந்து......" என்று நான் இழுத்தேன்.

"என்ன இல்லை ஸார்? அப்படியானால் இருங்கள், இதோ வருகிறேன்" என்று கூறிவிட்டு உள்ளே போனார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் நான் கண்ட காட்சி என்னைத் தூக்கி காலடி உயரப் போட்டது! ஒரு பெரிய உலக்கையைத் தூக்கிக் கொண்டு அவர் வந்து கொண்டிருந்தார்!

"இல்லை ஸார், நான் போகிறேன் ஸார்!" என்று அழாக் குறையாய்க் கெஞ்சினேன்.

"இருங்கள் ஸார், போகலாம்!" என்று உலக்கையைக் கீழே ஒரு தட்டுத் தட்டினார். எனக்குக் கதி கலங்கிப் போயிற்று.

"இதைப் பாருங்கள், ஸார்! இந்த உலக்கையைப் போன வாரம் வாங்கிக் கொண்டு வந்தேன். இன்று என் பெண் இதைக் கீழே தள்ளிக்கொண்டு நிற்கிறாள்!" என்று கூறி உலக்கையை என்னிடம் கொடுத்தார்.

உலக்கையை ஒரு முறை பார்த்துவிட்டு, "அடடா, புது உலக்கையா? ஆனாலும் உடையவில்லை போலிருக்கிறதே!" என்றேன்.

"யார் சொன்னார்கள் உடைந்ததென்று?"

"பின்......?"

"பின்னுவது மண்ணுவது! இது காலில் விழுந்தால் எவ்வளவு காயம் படும்?"

"நிறையக் காயம் படும்!"

"என் பெண்ணுக்கு இதே தொழிலாகப் போய்விட்டது. நாலு நாளைக்கொரு காயம் பட்டுக் கொள்கிறாள். பிறகு டாக்டரிடம் ஓடுகிறாள். இவள் டாக்டர் வீட்டிற்குப் போகாத நாளே இல்லையென்று சொல்லலாம். அவன் நல்லவன் போலிருக்கிறது: அதிகம் 'சார்ஜ்' செய்வதில்லை. ஆனால் அவன் வீடு ரொம்பத் தூரத்திலிருக்கிறது. வண்டிச் சத்தமே ஆளை விழுங்கி விடும்போலிருக்கிறது!" என்று படபடவெனப் பொழிந்து விட்டு, "இந்த ஊருக்கு அவன் ஒருவன்தான் டாக்டர்!" என்று முடித்தார்.

"இல்லை, இரண்டு ஸார்!" என்றேன்.

"இல்லை, ஒருவன்தான்!"

"இல்லை, இரண்டு பேர்!"

"யார் அந்த இன்னொரு மடையன்?"

"நான்தான் ஸார்!"

"ஹி...ஹி...அப்படியா? எனக்கு அப்பவே சந்தேகம்!" என்றார்.

அவர் எந்த அர்த்தத்தில் இதைச் சொன்னார் என்று எனக்குப் புரியவில்லை.

"நான் இன்றுதான் பக்கத்து வீட்டுக்குக் குடி வந்திருக்கிறேன். உங்களுக்கு ஆக்ஷேபம் இல்லாவிட்டால் நானே இந்தக் காயத்துக்குச் சிகிச்சை செய்கிறேன்" என்றேன்.

"ஆஹா, தாராளமாக!" என்றார் அவர்.

உள்ளே ஒரு பெண் காலைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். சுமார் பதினெட்டு வயதிருக்கும். காயத்தைக் கவனித்தேன். ஒன்றும் பிரமாதமில்லை. இதற்கு ஏன் இவ்வளவு கூப்பாடு போட்டாரென்று புரியவில்லை. சிகிச்சை முடிந்த பின் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டேன்.

நான் படி இறங்கி விருக்க மாட்டேன், உள்ளே அந்தப் பெண் "அப்பா, இவரைப் பார்த்தால்......" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தது காதில் விழுந்தது. அப் பெண்ணின் வாயிலிருந்து வரப்போகும் புகழுரையைக் கேட்கும் ஆவல் என்னை அங்கேயே நிறுத்தியது.

"அப்பா, இவரைப் பார்த்தால் கன்றுக் குட்டி மாதிரி இல்லே......?"

"ஆமாம் அம்மா, எனக்குக்கூட அவன் துள்ளித் துள்ளி நடக்கிறதைப் பார்த்தால் கன்றுக்குட்டி ஞாபகம்தான் வந்தது!"

"கன்றுக்குட்டி யில்லே, அப்பா! கழுதைக் குட்டி!"

அவ்வளவுதான்; ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்து நான் வீட்டை யடைந்தேன்.

இதற்குப் பின் ஒரு வாரம் நான் அவரைப் பார்க்கவில்லை.

ஒரு நாள் சாயங்காலம் ஆற்று மணலில் காற்று வாங்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். "என்ன ஸார், உங்களைக் கண்ணிலேயே காணோம்?" என்று கேட்டுக் கொண்டே அவர் வந்து என் பக்கத்தில் உட்கார்ந்தார். என் கையில் திருமண அழைப்பிதழ் ஒன்றைக் கொடுத்து, "அடுத்த வாரம் என் பெண்ணுக்குக் கலியாணம். தவறாது வாருங்கள், ஸார்! உங்களால் தான் ஸார், இந்தக் கல்யாணமே முடிவாயிற்று!" என்றார்.

"என்னவா!"

"ஆமாம், கேளுங்கள் ஸார், கதையை! என் பெண் அடிக்கடி காயம் பட்டுக் கொண்டிருந்தாளே, ஏன் தெரியுமா?"

"ஜோஸியம் தெரிந்தால் நான் ஏன் இப்படி இருக்கிறேன்?"

"அவளும் இந்த இன்னொரு டாக்டரும் காதல் கொண்டு விட்டார்களாம்! அவனை ஏதாவது காரணம் வைத்துக் கொண்டு தினம் பார்ப்பதற்குத்தான் அவள் அப்படிக் காயம் பட்டுக் கொண்டிருந்தாளாம்!"

"அதிலும் அவள் புத்திசாலி, ஸார்! சிறு காயமாகப் பட்டுக் கொண்டு பெரும் கத்தல் கத்திக் கொண்டிருந்தாள். நான் அப்பவே கவனித்தேன்!" என்று எனக்கு அப்போது தோன்றியதைச் சொன்னேன்.

"உங்கள் மூளையே மூளை, ஸார்! பிறகு பாருங்கள், அன்றைக்கு நீங்கள் பார்த்தீர்களா......?"

"ஆமாம்."

"இனிமேல் காயம் பட்டுக் கொண்டால் உங்களிடம்தானே வைத்தியம் செய்து கொள்ள வேண்டும் என்று பயந்து......"

நான் அவரை முறைத்துப் பார்த்தேன்.

"...இல்லே ஸார், உங்களிடம் வைத்தியம் செய்து கொள்ள வேண்டுமே யென்று பயத்தினால் அல்ல ஸார்! அவன் — அவன் தான் அவள் காதலன், அவனிடம் போக முடியாதே என்று பயந்து — என்னிடம் உண்மையைச் சொல்லிவிட்டாள். இந்தக் காலத்துப் பெண் பாருங்கள், கல்யாணத்தை முடிப்பதைத் தவிர நாம் வேறு என்ன செய்ய முடியும்?"

"ஒன்றும் செய்ய முடியாது!" என்று சொல்லி விட்டு நான் எழுந்தேன்.

அவர் திடீரென்று எழுந்து என் கழுத்தில் எதையோ போட்டார்!

"இதென்ன? நாம் செய்த உதவிக்கு இவர் மாலையா போடுகிறார்!" என்று ஆச்சரியத்துடன் பார்த்தேன்.

கீழே கிடந்த என் அங்கவஸ்திரத்தை எடுத்து என் கழுத்தில் போட்டிருக்கிறார்.

இந்த மட்டும் என் அங்கவஸ்திரத்தைத் தன் கழுத்தில் போட்டுக் கொள்ளாமல் என் கழுத்தில் போட்டாரே என்ற திருப்தியுடன் நான் வீட்டை நோக்கி நடந்தேன். அவரும் என்னைப் பின் தொடர்ந்தார்.

[இந்தக் கதையைப் படித்து முடித்து விட்டு எல்லோரும் எந்தக் கேள்வியைத் தவறாமல் கேட்பார்களோ, அதையே இதற்குத் தலைப்பாகக் கொடுத்திருக்கிறேன்!]

## ஐந்தாவது ஆண்டு விழா

● தெருவெங்கும் தமிழ் முழக்கம் செய்வதையும், தமிழ் மறையாகிய திருக்குறளைப் போதித்து வள்ளுவர் கண்ட உண்மைகளை வான்முகடு அதிரப் பரப்புவதையுமே குறிக்கோளாகக் கொண்டு சேவை புரிந்து வருவது பெரம்பூர் தமிழர் மன்றம்.

மேற்படி மன்றத்தின் ஐந்தாவது ஆண்டு விழா 17-10-48 அன்று ரஸிகமணி டி. கே. சி. அவர்களின் தலைமையில், எத்தனையோ தமிழ்ப் புலவர்கள் வாழ்ந்து தமிழ்த் தொண்டாற்றிய பெரம்பூரில் சிறப்பாக நடந்தேறியது. அவ்வமயம் ஸ்ரீ பெ. தூரன் அவர்களும் ஸ்ரீமதி ஆர். வி. சாஸ்திரி அவர்களும் சொற்பொழிவாற்றினர்; பிறகு ரஸிகமணி அவர்கள் தமிழ்க்கவியின் இன்பத்தையும் உயர்வையும் பற்றிக் கூறி எல்லோரையும் ரஸிக்க வைத்தார்கள்.

தமிழர் மன்றத்தை மிகவும் உற்சாகத்துடன் நடத்திவரும் வித்வான் கேதாரீசுவர சர்மா அவர்களைப் பாராட்டத்தான் வேண்டும்.

# மண்டபத்தில் முட்டுக்கட்டை ஏன்?

ராஜனி

கொழும்பு, அக்டோபர், 11.

இலங்கை - இந்தியா ராஜிப் பேச்சுகள் முறிந்து போய் விட்டதாகப் புதுடில்லி "ஸ்டேட்ஸ்மென்" பத்திரிகையில் வெளியான ஒரு செய்தி இங்கு விசேஷப் பரபரப்பை உண்டுபண்ணியிருக்கிறது. இலங்கையுடன் ராஜி பேசுவதிலே இனிப் பிரயோசனமில்லையென்று முடிவு செய்து விட்டதாகப் பண்டித ஜவாஹர்லால் நேரு லண்டனுக்குப் புறப்படுவதற்கு முன் இலங்கைப் பிரதமர் ஸ்ரீ சேனாநாயகாவிடம் சொல்லிவிட்டாராம். ஆயினும் லண்டனில் நேருவும் சேனநாயகாவும் மறுபடி சௌஜன்யமாகப் பேசிச் சமரசத்திற்கு வர முயற்சி செய்யலாமென்று நம்பப்படுகிறது.

இந்தியர் பிரஜாவுரிமை மசோதாவின்படி இலங்கைப் பிரஜைகளாக ரிஜிஸ்தர் செய்து கொள்ளும் இந்தியர்களையும் சிங்களவர்களையும் சமமாக நடத்துவதாகச் சட்டபூர்வமாய் இலங்கை உறுதி கூறவேண்டும். இந்த ஒரே ஒரு பிரச்னையில்தான் இப்பொழுது தகராறு இருந்து வருகிறது. இந்த விஷயத்தில் இலங்கை சிறிது தாராள மனப்பான்மையுடன் நடந்துகொண்டால் இந்தியாவின் நட்பை கொடிப்பொழுதில் சம்பாதித்துக் கொண்டு விடலாம். இந்தப் பெருந்தன்மை இலங்கைத் தலைவர்களுக்கு இருக்குமா என்பதுதான் கேள்வி.

## இலங்கையில் காந்தி கிராமம்

மகாத்மா காந்திக்கு இலங்கையில் ஒரு ஞாபகச் சின்னம் ஏற்படுத்துவதற்காக இந்திய ஹைகமிஷனர் ஸ்ரீ வி. வி. கிரியின் தலைமையில் கண்டி நகரிலே ஒரு பிரம்மாண்டமான பொதுக்கூட்டம் நடைபெற்றது. சென்னை மாகாண மாஜி சட்ட மந்திரி ஸ்ரீ கே. பாஷ்யமும் இந்தக் கூட்டத்துக்கு வந்திருந்தார். மகாத்மா காந்தியின் கொள்கைகளை அனுஷ்டானத்தில் நடத்தி வைக்க 50 ஏகரா நிலத்தில் ஒரு காந்தி கிராமத்தை நிர்மாணிப்பதென்று இலங்கை இந்தியக் காங்கிரஸ் தீர்மானித்திருக்கிறது. இந்தத் திட்டத்தை ஆதரிப்பதென்றும், இதைத் தவிர காந்தி சேவா சங்கமொன்றை ஏற்படுத்தி அதன் மூலம் காந்தியக் கொள்கைகளைப் பிரசாரம் செய்வதென்றும் பொதுக்கூட்டத்தில் தீர்மானிக்கப் பட்டது.

## மண்டபத்தில் தடை ஏன்?

ரஜாவில் இந்தியாவுக்குப் போய்விட்டு இலங்கைக்குத் திரும்புகிறவர்களில் பலரை மண்டபத்திலுள்ள இந்தியக் குடியேற்ற அதிகாரி இலங்கைக்குப் போகக் கூடாதென்று தடை செய்கிறாராம். இது இலங்கை இந்தியர்களிடையில் பெருத்த பரபரப்பை உண்டு பண்ணியிருக்கிறது. ஏற்கெனவே இலங்கையில் வசித்த இந்தியர்களை இலங்கைக்குப் போகலாகாதென்று தடுக்க மண்டபம் அதிகாரிக்கு அதிகாரமில்லை. அவருக்குப் புதிய உத்தரவுகள் கிடைத்திருந்தால் அது இங்குள்ள ஸ்ரீ கிரிக்குத் தெரிந்திருக்க வேண்டும். மண்டபம் அதிகாரி யதேச்சாதிகாரம் செலுத்துவதாயிருந்தால் அது அழுத்தமாகக் கண்டிக்கத் தகுந்தது. இதைப் பற்றி உண்மையைத் தெரிந்து கொண்டு வர ஸ்ரீ கிரி தம்முடைய காரியதரிசி ஸ்ரீ இராகவாச்சாரியை மண்டபத்துக்கு அனுப்பியிருக்கிறார்.

## முஸ்லிம்களும் தீபாவளியும்

இந்தியாவிலுள்ள குடும்பங்களுக்குத் தீபாவளிப் பண்டிகைக்காகப் பணமனுப்ப மனுக் கொடுத்தால், நபர் ஒருவருக்குச் சுமார் 100 ரூபாய் வரையில் அனுப்ப அனுமதி கொடுப்பதாகச் செலாவணிக் கட்டுப்பாடு அதிகாரி தெரிவித்திருந்தார். இதைப் பலர் துஷ்பிரயோகம்... இதைப் பலர் குறையாட ஆரம்பித்து விட்டார்கள். ஒரே நபர் பல தேதிகளில் பல மனுக்களை எழுதிப் போடுவதோடு, முஸ்லிம்களும் தீபாவளிப் பண்டிகையைக் கொண்டாடுவதற்குப் பண மனுப்ப வேண்டுமென்று கோரி மனுச் செய்தார்களாம்!

"முஸ்லிம்களுக்குத் தீபாவளிப் பண்டிகை யில்லை யென்பதைத் தெரிந்து கொள்ளும் அளவிற்குக் கூட எங்களுக்கு மூளையில்லை யென்று நினைத்துவிட்டார்கள் போலிருக்கிறது. உரிமை துஷ்பிரயோகம் செய்யப்படுவதால் எல்லா மனுக்களையும் திருப்பியனுப்பிவிட உத்தரவிட்டு விட்டேன்" என்று உதவி செலாவணிக் கட்டுப்பாடு அதிகாரியான மிஸ்டர் ஏ. ஜே. ஜோசப் கை விரித்து விட்டார்.

# மேரா புல்புல்!




நேற்று மாலை கடற்கரைக்குச் சென்றிருந்த நான், வழக்கமாக உட்காரும் இடத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தேன். எனக்கு முன்னால் ஓர் உருவம் நீளமான வெள்ளை ஜிப்பாவும், அகலமான பைஜாமாவும் அணிந்து சென்று கொண்டிருந்தது. அந்த உருவத்தை ஒரு கணம் கூர்ந்து கவனித்ததும், "ஹலோ, மிஸ்டர் ரஞ்சன்!" என்றேன் நான்.

அவன் என்னைத் திரும்பி ஆச்சரியத்துடன் பார்த்துவிட்டு, "அரே, ஹமாரே தோஸ்த் ரமன்!" என்றான்.

எனக்குப் பகீரென்றது. ஒருவேளை தெரியாமல் ஹிந்திவாலாவைத்தான் கூப்பிட்டுவிட்டோமோ என்று எண்ணி, அவனை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு ஒன்றும் புரியாமல் தவித்தேன்.

"க்யோம் ரமன்! ஐஸே தேக்தே ஹோ?" என்றான் அவன்.

"அடேய், நீ ரஞ்சன்தானேடா? யாரை ஏமாற்ற இந்த வேஷம் போடுகிறாய்?" என்று நான் நண்பன் என்ற உரிமையுடன் கேட்டேன்.

"ஜரூர். ஜரூர் ரமன்! மை ஹூம் ரஞ்சன்!" என்று மறுபடியும் அவன் அதே ஹிந்தி தோரணையில் பேசினான்.

எனக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. "ஹிந்தி ஒழிக! ஹிந்தி அடியோடு ஒழிக! ஹிந்தி உன்னோடு ஒழிக!" என்று தொண்டை கிழியக் கத்தினேன்.

அவன் இடிஇடி யென்று சிரித்துவிட்டு, "நான் யாரையும் ஏமாற்ற இந்த வேஷம் போடவில்லை, ரமன்! நம்ம புல்புல் வந்திருந்து......" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

"அதென்னடா புல்புல், கிறுகிறுப்பை மாதிரி!" என்றேன்.

"புல்புல்னு ஒரு வகை பக்ஷிடா, பக்ஷி! அதைக் காதலிக்கும் சொல்லுவதுண்டு. அதனாலே......"

"ஹூம்......நீ கெட்ட கேட்டுக்குக் காதலி கூடக் கிடைத்துவிட்டாளா!...... உம்......அப்புறம்?"

"ஓர் ஷாதி பீ ஹோ கயீ!"

"என்னடா, இது? என்ன, என்னவெல்லாமோ உளறுகிறாய்?"

"இல்லை, ரமன்! 'கலியாணம்கூட ஆகிவிட்டது' என்று சொன்னேன்."

"அடே! எப்போது கலியாணம் நடந்தது? யாரைக் கலியாணம் செய்து கொண்டாய்?"

"அவள்தான் ரமன், நம்ம சஜனி! நாம் காலேஜில் வாசித்துக் கொண்டிருந்த போது ஹைஸ்கூலில் படித்துக் கொண்டிருந்தாளே, அவள்!"

"யார்? முழங்கால் வரை சடையைப் பின்னி ஒத்தையாகவும் இரட்டையாகவும் தொங்கவிட்டுக் கொண்டு வடநாட்டுப் பெண்ணைப்போல் போவாளே, அவளையா?"

"ஆமாம், ஆமாம்; சாக்ஷாத் அவளே தான்!—வா, வீட்டுக்குப் போவோம். என் கதையை முழுக்க முழுக்க நீ கேட்க வேண்டாமா?" என்று அவன் என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனான்.

வீடு வந்து சேர்ந்ததும் என்னை ஒரு சோபாவில் உட்கார வைத்துவிட்டு, "சஜனி! ஓ, சஜனி!" என்று இரைந்தான். உள்ளேயிருந்து, "க்யோம்......!" என்று யாழினும் இனிய ஒரு குரல் குழைந்து வந்தது.

"சஜனி! ஜரா, தோ க்ளாஸ் டண்டா பானி லாவோ!" என்ற ரஞ்சன், திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டவன் போல், "டஹரோ! அபி ஆதா ஹூங்" என்று சொல்லிவிட்டு எழுந்தான்.

நான் "என்ன?" என்றேன்.

"ரமன்! இப்போது என்னத்திற்குக் குளிர்ந்த ஜலம்? இதோ 'ஹாட்டா' இரண்டு காப்பி கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு அவன் உள்ளே போய்விட்டான்.

## 2

அந்த இளந் தம்பதிகள் இருவரும் ஹிந்தி பேசுவதையும் குழைந்து குழைந்து ஓடுவதையும் கண்ட நான் யோசனையில் ஆழ்ந்தேன். நான்கு வருடங்களுக்கு முன்னால் நானும் ரஞ்சனும் சென்னையில் படித்துக் கொண்டிருந்தோம். என்னை எங்கேயாவது பார்த்தால் அவனையும் அங்கே பார்க்கலாம்; அவனை எங்கேயாவது பார்த்தால் என்னையும் அங்கே பார்க்கலாம். அது மட்டுமா?—உணவு, உடை எல்லாம் கூடக் 'கலப்பு மண'மாகவே இருந்தன. ஆனால் ஒரே விஷயத்தில் மட்டும் எனக்கும் அவனுக்கும் கொஞ்சம் வித்தியாசம் இருந்தது. அதுதான் அந்த 'லவ்' என்ற வார்த்தை! நான், 'காதலாவது தீதலாவது! எல்லாம் வெறும் பித்தலாட்டம்!' என்பேன். அவனோ உட்கார்ந்தால் 'லவ்' எழுந்தால் 'லவ்' என்று ஒரு பெரிய 'லவ்' கோட்டையே கட்டி, அதில் 'பாகிஸ்தான் ஆட்சி' புரியத் தொடங்கி விட்டான்.

ஒரு நாள் மாலை என் அறையில் உட்கார்ந்து கொண்டு, நான் ஆலிவர் கோல்ட்ஸ்மித் எழுதிய ஒரு புத்தகத்தில் ஆழ்ந்து மூழ்கிக் கிடந்தேன். அந்தச் சமயத்தில் ரஞ்சன் மிக ஆனந்தமாகச் சீட்டி அடித்துப் பாடிக்கொண்டே வந்து, "மிஸ்டர் ரமன்! ஒரு நிமிஷம்......!" என்று சொல்லி எதிரேயிருந்த நாற்காலியில் உட்கார்ந்தான். நானும் புத்தகத்தை மூடிவிட்டுக் கொஞ்சம் புன்முறுவலோடு அவனை நோக்கினேன்.

"ரமன்! இத்தனை நாட்களாக நான் எதற்காக ஏங்கிக் கொண்டிருந்தேனோ, அந்த 'லவ்' கிடைத்து விட்டதடா!" என்றான் அவன்.

"உம்......அப்புறம்?" என்றேன் நான்.

"இன்று 'ஹாக்கி' விளையாடிவிட்டு நான் சைக்கிளில் வந்து கொண்டிருந்தேன். எனக்கு முன்னால் அந்த ஹைஸ்கூல் பெண்மணிகள் பலவர்ணப் புடவைகளுடன் நகர்ந்து கொண்டிருந்தனர். அவர்களில் ஒருத்தி 'ரோஸ் ஸாரி'யுடன் முழங்கால் வரையில் சடையைப் பின்னித் தொங்கவிட்டுக் கொண்டு ஒய்யாரமாக நடந்து கொண்டிருந்தாள். அவள் அழகை எப்படி வர்ணிப்பேன்! அடாடா! அவள் எவ்வளவு அழகாயிருந்தாளடா! நீ படித்திருக்கிறாயே, அந்த ஹீப், வீனஸ் எல்லாம் அவளேதாண்டா! கொஞ்சம் முன்னே போய்த் திரும்பி ஒரு 'லுக்' கொடுத்தேன்; அவளும் நோக்கினாள், அண்ணலும் நோக்கினேன்! அவ்வளவுதான்; அடுத்த நிமிஷம் நாணத்தோடு அவள் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்; நானும் சைக்கிளைத் திருப்பிக் கொண்டு வந்து விட்டேன்!—இதைத் தாண்டா 'கண்டதும் காதல்' என்று சொல்லுவது!" என்று அவன் மூச்சு விடாமல் சொல்லிக் கொண்டே போனான்.

நான் இடைமறித்து, "கண்டதும் காதலோ, காணாமலே காதலோ!—எனக்கு ஒன்றும் வேண்டாம், போ!" என்று சொல்லி விட்டுப் புத்தகத்தை மீண்டும் பிரித்து வாசிக்க ஆரம்பித்தேன்.

அன்றையிலிருந்து சனியன் பிடித்துக் கொண்டான் — அவனை யல்ல; என்னைத்



தான்! அந்த விஷயத்திலிருந்து அவனுடைய 'லவ்' உச்சரிப்பு அதிகரிக்கத் தொடங்கிவிட்டது. "ரமன்! இதைக் கேட்டாயா, அதைக் கேட்டாயா!" என்று பொழுது விடிந்தால் பொழுது போனால் ஓயாமல் பேசத் தொடங்கிவிடுவான். அவனுடைய தொந்தரவைப் பொறுக்க முடியாமல் ஒரு வருஷம் பரீட்சையில் 'கோட்' அடித்து விடலாமா வென்றுகூட எனக்குத் தோன்றும்.

நல்ல வேளையாக இந்த 'லவ்' விஷயத்தினால் அந்த வருஷம் நடந்த பரீட்சையில் நான் தவறுவதற்குப் பதிலாக அவன் தவறிவிட்டான். எப்படியோ முட்டி மோதி நான் பீ. ஏ. ஆனர்ஸ் முடித்துவிட்டு ஒரு காலேஜில் 'லெக்சரர்'ராக அமர்ந்து விட்டேன். அவன் நினைவு வரும்பொழுது ஏதாவது கடிதம் எழுதலாமென்று நினைப்பேன்; கடிதம் எழுதினால் அவன் எங்கே தன் 'லவ்' பேச்சை ஆரம்பித்து விடுவானோ என்று பயந்து சும்மா இருந்து விடுவேன். இப்படியே நான்கு வருடங்கள் ஓடி மறைந்துவிட்டன.

## 3

"ஹலோ ரமன்! க்யா ஸோச் ரஹே ஹோ?" என்று கேட்டு, என் சிந்தனையைக் கலைத்தான் ரஞ்சன். நிமிர்ந்து பார்த்தேன்; எதிரே காப்பியுடன் நின்று கொண்டிருந்தான் ரஞ்சன்.

"காப்பி இருக்கட்டும்; முதலில் உன் கதையைச் சொல்லு!" என்றேன்.

"ஓ! மேரி கஹானி?.........அச்சா, ஸுனாத்தா ஹூம்!" என்று அவன் கதையை ஆரம்பித்தான்.

"அடேய்! தமிழிலே சொல்லுடா!" என்று நான் ஹிந்திக்குத் தடை உத்தரவு போட்டேன்.

"சரி, தமிழிலேயே சொல்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை! என்ன தெரியுமா? தப்பித் தவறி ஏதாவது ஹிந்தி வார்த்தை வந்தால் பொறுத்துக்கொள்ள வேண்டும்" என்று வெளியே தலையை நீட்டி, எங்கே அவளுக்குக் கேட்டுவிடப் போகிறதோ என்று பயந்தவனாய்க் கதவை மெல்ல இழுத்து உள் பக்கமாகச் சாத்திக் கொண்டான்.

"சரி, சொல்லு!" என்றேன்.

"நாம் காலேஜில் வாசிக்கும்பொழுது அடிக்கடி உன்னிடம் வந்து ஒரு வடநாட்டுப் பெண்ணைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருப்பேனல்லவா? உண்மையில் அவள் என்னை முதல் நாள் பார்த்தாளே, அவ்வளவு தான்; அதற்குப் பிறகு அவள் என்னை ஏறிட்டுப் பார்க்கவில்லை. ஆனால் அவளுடைய உருவம் மட்டும் என்னுடைய கனவில் தோன்றி என்னைத் தூங்கவிடாமல் செய்து, என்னிடம் கொஞ்சுவதும், குலாவுவதுமாக இருக்கும்; உடனே நான் ஆவலுடன் எழுந்து கண்களை அகல விரித்துப் பார்ப்பேன். அவள் அங்கே இருக்கமாட்டாள்; எங்கும் ஒரே சூன்யமாயிருக்கும். அந்தச் சூன்யத்தைப் பார்த்துவிட்டு நான் பேசாமல் படுத்துக் கொள்வேன். மறுபடியும் அவளுடைய அழகிய நடை, இடை, உடையெல்லாம் தோன்றித் தோன்றி என்னைச் சித்திரவதை செய்யும். இந்த நிலையில் இன்னொரு முறை அவள் நம்மைப் பார்ப்பதற்கு என்ன செய்யலாம் என்று நான் தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தேன். ஒரு நாள் நள்ளிரவில் எனக்குத் திடீரென்று ஞானோதயம் உண்டாயிற்று. அது என்ன தெரியுமா, ரமன்......?"

"தெரியாதே!"

"அதாவது, ஒரு வாரம் ஒழிசல் ஆடை அணிந்து அவள் முன்னால் போவதும் வருவதுமாக இருப்பது; தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு அவளைப் பரிதாபமாகப் பார்ப்பது; 'உன்னால்தானே நான் இந்த நிலைக்கு வந்து விட்டேன்' என்று அவள் மனம் இளக நடந்து கொள்வது—என்பது தான் அது. இப்படியே ஒரு வாரம் முழுவதும் அவளுக்கு முன்னால் நான் 'லைலா மஜ்னு' நாடகம் நடத்திக் காண்பித்தேன்; ஒன்றும் பிரயோஜனமில்லை. 'சரி, தாடிக்கும் காதலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு' என்கிறார்களே என்று கொஞ்சம் தாடி வைத்துப் பார்த்தேன். தாடிதான் 'கருகரு' வென்று வளர்ந்ததே தவிர காதல் வளரவில்லை.

"மிஸ்டர் ரமன்! நான் என்ன செய்வேன்! எல்லா ஆயுதங்களையும் செலுத்திப் பார்த்தாகிவிட்டது; எதிரியோ அசைந்ததாகத் தெரியவில்லை. கடைசியில் இன்னும் ஒரே ஒரு ஆயுதம்தான் பாக்கி இருந்தது; அதுதான் அடாமிக் பாம்! அதையும் பரீட்சித்து விடுவது என்று நிர்மாணித்தேன். அதற்கு நண்பன் ஒருவனுடைய உதவி தேவையாயிருந்தது. அந்த விஷயத்தில் உன்னுடைய உதவி கிடைக்காது என்றுதான் எனக்குத் தெரியுமே! ஆகவே நம்ம கணபதியைத் தேடி ஓடோடியும் சென்றேன். அவன் அறையின் கதவைத் 'தட

தட' வென்று இடித்தேன். கணபதி பரபரப்புடன் வந்து கதவைத் திறந்து, 'என்ன ரஞ்சன்! என்னமோ உயிர் போகிற காரியம் போல் வந்து கதவை இடித்து விட்டு இப்படி அலங்கோலமாக நிற்கிறாயே!' என்றான்.

'ஆமாம், உயிர் போகிற காரியம்தான்; நீ மனம் வைத்தால் இந்த உயிரைக் காப்பாற்றலாம்; இல்லையேல் இந்த உயிர் நில்லாது!' என்றேன்.

'என்ன உளறுகிறாய்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! விஷயத்தைச் சொல்லு!'

'வேறொன்றுமில்லை; நான் ஒரு பெண்ணை வருஷக் கணக்கில் உயிரைப் பணயம் வைத்துக் காதலித்து வருகிறேன். ஆனால் அவளோ என்னைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டேன் என்கிறாள். அவளுக்காக நான் எத்தனையோ அவதாரங்களை எடுத்துக் காட்டினேன்; ஒன்றும் பலனில்லை. கடைசியில் ஒரு யோசனை தோன்றியிருக்கிறது. அதற்கு உன்னுடைய உதவி வேண்டும். நான் அவளை உனக்குக் காட்டுகிறேன். நீ காலேஜ் நாட்கள் அவளைச் சுற்றிச் சுற்றி வந்து, வெறித்து வெறித்துப் பார்த்து அவளுடைய வெறுப்பை எப்படியாவது சம்பாதித்துக் கொள்ள வேண்டும். பிறகு யாரும் வராத சமயமாகப் பார்த்து அவளை நெருங்கி, 'உன்னுடைய அழகில் நான் என் மனதைப் பறி கொடுத்து விட்டேன்' என்று சொல்ல வேண்டும். அவள் 'நான்சென்ஸ், இடியட்!' என்றெல்லாம் வைவாள். அதை லட்சியம் செய்யாமல் நீ அவளுடைய கரத்தைப் பற்ற முயல வேண்டும்; அவள் கூச்சலிடுவாள். நான் யாரோ வழிப்போக்கன் மாதிரி விரைந்து வந்து உன்னை ஒரு குத்து விடுகிறேன்; நீ தட்டுத் தடுமாறி விழுந்து எழுந்து திரும்பிப் பார்க்காமல் ஓடிவிடு!—அப்புறம் நான் அவளைப் பார்த்துக் கொள்ளுகிறேன். என்ன சொல்லுகிறாய்?' என்று பரிதாபமாக அவனைப் பார்த்தேன். அவன் சிறிது நேரம் யோசித்துவிட்டு, 'ஆகட்டும்' என்றான்.

"இந்த ஏற்பாட்டின்படி காலேஜ் நாட்கள் நான் தலை மறைவாக இருந்து விட்டேன்; என்னுடைய நண்பன் மட்டும் அவள் முன்னேயும் பின்னேயும் வளைய வளைய வந்துகொண்டிருந்தான். கடைசியில் ஒரு நாள் நான் சொன்னபடி செய்யவும் செய்தான். எதிர்பார்த்தபடி அவளும் கூக்குரலிட்டாள்; நான் சைக்கிளை அனாயாசமாகப் போட்டுவிட்டு என்னுடைய நண்பன் மேல் பாய்ந்தேன். அவன் எடுத்தான் ஓட்டம்!—வெற்றியுடன் நான் அவள் பக்கம் திரும்பினேன். அவள் மெய்சிலிர்க்கக் கண்கள் படபடக்க, கைகள் நடுநடுங்க, 'தாங்க்ஸ்!' என்று தன் இதய பூர்வமான நன்றியை எனக்குத் தெரிவித்தாள்.



"டேய், ரமா! விச்சு ரொம்ப அயோக்கியன்; அவனோடு நீ விளையாடாதே!"
"நான்தான் ரொம்ப நல்லவனாச்சே; என்னோடு அவன் விளையாடட்டுமே, அப்பா!"

"அவ்வளவுதான் ரமா! அந்தக் கடைசி ஆயுதமான அடாமிக் பாம் எனக்கு வெற்றியைக் கொண்டு வந்து விட்டது. அன்றையிலிருந்து என்னை 'வணக்கத்திற்குரிய வீரன்' என்று மதித்து அவள் புன்முறுவல் தவழ 'நமஸ்தே' பண்ணத் தொடங்கி விட்டாள். நாளடைவில் அந்த 'நமஸ்தே'க்கள் வளர்ந்து காதலாக அரும்பி மலர்ந்தது. கடைசியில் என்னைக் கல்யாணமும் செய்து கொண்டாள். இப்பொழுதெல்லாம் ஆபீஸிலிருந்து வரும்போது, 'மோரா புல்புல்! மோரா புல்புல்!' என்று பாடிக்கொண்டே நான் மாடிப் படி ஏறுவதுதான் தாமதம், அவள் 'ஆவோ சாஜன்! ஆவோ சாஜன்!' என்று குழைந்து பாடிக்கொண்டே வந்து தன் தளிர்க் கரங்களை நீட்டி என்னை வரவேற்கிறாள்! — கையில் உறை றுமாலி கறானி?......ஹஹ்ஹம்......வந்து...வந்து ......எப்படி இருக்கிறது, எங்கள் கதை?" என்று தவறி தீர்த்தி பேசியதற்காக அவன் தடுமாறிக் கொண்டே கேட்டான்.

நான் அது வரையில் அவன் பேசிய தீர்த்தி வார்த்தைகளைக் கூட்டிக் குழப்பி, "பஹுத் அச்சி ஹை!" என்று சொல்லி விட்டு எழுந்து நடையைக் கட்டினேன்.

# மந்திரக் குல்லா




பி. எஸ். மணி

மஹாராஜாவுக்கு வயதாகிவிட்டதால் தம் ஒரே குமாரன் யதுவர்மனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்து, ராஜ்யத்தை அவன் கையில் ஒப்புவித்துவிட வேண்டும் என்று தீர்மானித்தார்.

பட்டாபிஷேக தினத்தன்று நகர் முழுவதும் தோரணங்களும் அலங்காரங்களும் பிரமாதப்பட்டன. ஆனால் ஜனங்கள் முகத்தில் மட்டும் உற்சாகத்தையே காணோம். காரணம் அந்த ராஜகுமாரன் பொல்லாதவனாயிருந்ததுதான். ஜனங்களை இம்சிப்பதில் அவனுக்கு எப்போதும் உற்சாகம் அதிகம். அதிலும் நொண்டிகளையும், ஊமைகளையும் கண்டுவிட்டால் அவனுக்கு உற்சாகம் கரை கடந்துவிடும். அவன் நொண்டிகளை அரண்மனைக்கு அழைத்து வந்து நர்த்தனம் புரியும்படி அவர்களை அடித்துத் துன்புறுத்துவான்; ஊமைகள் அகப்பட்டுக் கொண்டால் அவர்களைப் பாடச் சொல்லிக் கைகொட்டிச் சிரிப்பான்.

இந்தப் பொல்லாத அரசகுமாரனுக்குப் பட்டம் கட்ட ராஜாவுக்குச் சம்மதம் இல்லைதான். ஆனால் பட்டத்துக்குரியவர் வேறு யாரும் இல்லாததால் அவனுக்கு முடி சூட்டும்படியாயிற்று.

அரண்மனையில் பல தேசத்து அரசர்களும், சிற்றரசர்களும் கூடியிருந்தனர். விருந்துகளும், கேளிக்கைகளும், காதுக்கினிமையான கச்சேரிகளும் சிறப்பாக நடந்தன. பட்டாபிஷேக வைபவத்துக்கு வந்த அரசர்களெல்லாம் யதுவர்மனுக்குப் பல பரிசுகளை வழங்கினர். அப்போது அங்கே ஒரு தேவதை தோன்றி, அரசகுமாரனுக்கு ஒரு பழைய குல்லாயைப் பரிசாக அளித்தது.

"என்னை எல்லோரும் கேலி செய்வதற்காகவா இந்தப் பரிசை அளிக்கிறீர்கள்?" என்று அரசகுமாரன் வருத்தத்துடன் தேவதையைப் பார்த்துக் கேட்டான்.

"இந்தப் பரிசு அழுக்கடைந்ததானாலும் அதன் மகிமை எப்படிப்பட்டது தெரியுமா? இந்தக் குல்லாயை அணிந்தவர்கள் எதிலும் உண்மையையே காண்பார்கள். எந்த உயிரினிடத்திலும் அன்புடனும் இரக்கத்துடனும் நடந்து கொள்ளுவார்கள்!" என்று கூறி, அவனிடம் குல்லாயைக் கொடுத்துவிட்டுத் தேவதை மறைந்துவிட்டது.

ஒரு நாள் அரசன் ராணியுடன் வீதியில் பவனி சென்றான். அப்போது அவன் தன் தலையில் தேவதை அளித்த மந்திரக் குல்லாயைத் தரித்திருந்தான். அதனால் அவன் யாரையும் இம்சிக்கவில்லை. ஆயினும் ஜனங்கள் ஆரவாரத்துடன் பவனியில் கலக்காமல் மூலைக்கொரு பக்கம் ஓட ஆரம்பித்தனர். எதற்காகத் தெரியுமா? அரசன் அணிந்திருந்த அழுக்குத் தொப்பியைப் பார்த்ததும் அவர்களுக்குச் சிரிப்பு பொத்துக்கொண்டு வந்தது; அந்தச் சிரிப்பை அடக்கிக் கொள்ளுவதற்காகத்தான் அவர்கள் அப்படி ஓடினர்!

ராணி இதைக் கூர்ந்து கவனித்தாள். அரண்மனைக்கு வந்ததும் அவளுக்குத் துக்கமும் கண்ணீரும் பெருகி வந்தது. உடனே அந்த மந்திரக் குல்லாயை எடுத்து அவள் ஆத்திரத்துடன் வீதியில் எறிந்துவிட்டாள்.

அந்தச் சமயத்தில் பாத்திர வியாபாரி ஒருவன், "பாத்திரம் வாங்கலையோ, பாத்திரம்!" என்று தெருவில் கத்திக் கொண்டு சென்றான். ராணி வீசி யெறிந்த குல்லா தற்செயலாகப் பாத்திர வியாபாரியின் தலையில் வந்து விழுந்தது. உடனே பாத்திர வியாபாரி, "என்னிடமுள்ளவை யெல்லாம் பழைய பாத்திரங்கள், உடைந்த பாத்திரங்கள்! வாங்காதீர்கள், வாங்காதீர்கள்!" என்று கத்தினான்.

வியாபாரி அணிந்திருந்த குல்லா தற்செயலாகக் கீழே விழுந்தது. உடனே அவன் பழையபடி "புதிய பாத்திரங்கள், அழகான பாத்திரங்கள், குறைந்த விலை! வாங்குங்கள், வாங்குங்கள்!" என்று கத்தினான். கூடியிருந்த ஜனங்கள் அனைவரும் ஒன்றும் புரியாமல் விழித்தனர். இதற்குள் ஒரு பையன் கீழே விழுந்த குல்லாயை எடுத்துப் பாத்திர வியாபாரியிடம் கொடுத்தான். அதை அணிந்ததும் அவன் மறுபடியும் "என்னுடைய சாமான்கள் மோசமான சாமான்கள்; வாங்காதீர்கள்!" என்று கத்த ஆரம்பித்தான். ஜனங்கள் அவனைப் பரிகசித்துச் சிரித்தனர்.

பிறகு பாத்திர வியாபாரி சிறிது நேரம் சிந்தித்துப் பார்த்தான். 'இது மந்திரக் குல்லாயா யிருக்க வேண்டும்; இல்லையென்றால் அது நம் தலையில் வந்து விழுந்ததும் நாம் உண்மை பேசி யிருப்போமா?' என்று அவன் நினைத்தான். அதற்குள் அங்கிருந்தவர்கள் அந்தக் குல்லா அரசனுடையது என்று சொன்னார்கள். உடனே பாத்திர வியாபாரி அரண்மனையை நோக்கிவிரைந்தான். அரசனிடம் சென்று, "அரசே! தங்கள் குல்லா இதோ இருக்கிறது!" என்று சொல்லிக் குல்லாயை அரசனிடம் கொடுத்தான். அரசனுக்கு வியப்பு தாங்க முடியவில்லை. "உன்னிடம் குல்லா எப்படி வந்தது?" என்று கேட்டான்.

வியாபாரி ஒன்றும் கூறாமல் ராணியை நோக்கினான். ராணி நடந்த விஷயத்தைச் சொன்னாள்.

இந்தச் சமயத்தில் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. வியாபாரி நின்ற இடத்தில் தேவதை வந்து நின்றது!

"யதுவர்மா! நீ நொண்டிகளையும் ஊமைகளையும் இம்சித்துக் கொண்டிருந்தாயல்லவா? அவர்களிடம் நீ இரக்கம் காட்ட வேண்டுமென்பதற்காகத்தான் நான் உனக்கு இந்த மந்திரக் குல்லாயை அளித்தேன். ஜனங்களின் அன்புக்கு நீ பாத்திரமாக வேண்டுமானால் இந்தக் குல்லாயைப் பத்திரமாகப் பாதுகாத்து வர வேண்டும்!" என்று சொல்லிவிட்டுத் தேவதை மறைந்தது.

அன்றிலிருந்து அரசன் அந்தக் குல்லாயைப் பத்திரமாகப் பாதுகாத்து வந்தான். ராணியைச் சந்தோஷப் படுத்த அந்தக் குல்லாவில் 'பளபள' வென்று ஜரிகை வேலைப்பாடுகள் செய்து அணிந்து கொண்டான்.





# காலக்ஷேபம்



## வித்தியாசம்!

ஒருவர் தம் நண்பரிடம் தம்முடைய மகனுக்குப் படிப்பிலுள்ள திறமையைப் பற்றிப் புகழ்ந்து பேசிக் கொண்டிருந்தார். அப்பொழுது அந்தச் சிறுவன் கையில் இரண்டு புத்தகங்களுடன் அங்கு வந்து சேர்ந்தான்.

**நண்பர்:**—தம்பி! கையில் மகாபாரதம், இராமாயணம் இரண்டும் வைத்திருக்கிறாயே! அவற்றை நன்றாய்ப் படித்திருக்கிறாயா?

**சிறுவன்:**—படித்திருக்கிறேன்.

**நண்பர்:**—அவை இரண்டுக்கும் உள்ள வித்தியாசமென்ன?

**சிறுவன்:**—ராமாயணத்துக்குப் பச்சை அட்டை போட்டிருக்கிறது; பாரதத்துக்கு நீல அட்டை போட்டிருக்கிறது!



## நல்ல இரவல்!

**துரைசாமி:**—நான் போனவாரம் உன்னிடமிருந்து சத்தி இரவல் வாங்கிக் கொண்டு போனேனே, அதைத் திருப்பிக் கொடுத்து விட்டேனா இல்லையா?

**ராமசாமி:**—இல்லையே, அப்பா!

**துரைசாமி:**—பின்னே அது எங்கே போய்விட்டது? மறுபடியும் உன்னிடம் அதை இரவல் வாங்கிக் கொண்டு போகலாம் என்றல்லவா வந்தேன்!



## சரிதான்!

**கரிக் கடை முதலாளி:**—டேய் முனியா, சீக்கிரமாகப் போய்க் காஞ்சிபுரத்துக்கு ஒரு டிக்கட்டு வாங்கிக் கொண்டு வா!

**முனியன்:**—இதோ போகிறேனுங்க! உடம்பெல்லாம் கரியாக இருக்கிறது. குளித்து விட்டு ஓடிப் போய்......!

**முதலாளி:**—போடா, முட்டாள்! இப்படியே போனால்தான் அந்தக் கூட்டத்தில் டிக்கெட்டு வாங்கச் சௌகரியமாயிருக்கும். அதற்குத்தானே உன்னைக் கூப்பிட்டேன்!

## சந்தேகம்

**எதிர் வக்கீல்:**—பிரதிவாதிதான் உமது சைக்கிளைத் திருடினான் என்று நீர் நிச்சயமாய்ச் சொல்லுவீரா?

**வாதி:**—நீங்கள் குறுக்கு விசாரணை செய்கிறவரையில் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுது அந்த சைக்கிள் என்னுடையதுதானா என்ற சந்தேகம் வந்துவிட்டது!



## பேஷ்!

**எஜமானி:**—என்ன அநியாயம் இது? எனக்குத் தெரியாமல் என் கறுப்புப் பட்டுப் புடவையை எடுத்துக் கட்டிக் கொண்டு அழகு பார்த்துக் கொள்ளுகிறாயே!

**வேலைக்காரி:**—உங்களுடைய சிவப்புப் பட்டுப் புடவை எனக்கு நன்றாயில்லை, அம்மா!



## அப்பா வேண்டாம்!

பிரைவேட் ட்யூஷன் சொல்லித் தரும் உபாத்தியாயர் ஒரு பையனுக்குக் கணக்கு சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அவர் எவ்வளவு முயன்றும் பையன் மூளையில் கணக்கு ஏறவே யில்லை.

உபாத்தியாயர் கோபத்துடன், "என்ன இந்த முட்டாளாயிருக்கிறாயே! இந்தக் கணக்கை இன்றைக்கு நீ சரியாய்ப் போடாவிட்டால் நிச்சயமாய் அடிப்பேன்!" என்றார்.

"என்ன, என்னையா அடிப்பீர்கள்!" என்று கேட்டான் பையன்.

இந்தச் சமயத்தில் வெளிக்கூடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த அப்பா, "டேய்,



அங்கே என்ன சத்தம்? நான் வரட்டுமா?" என்று கேட்டார்.

"நீங்கள் எதற்கு? வேண்டாம், அப்பா! நானே பார்த்துக் கொள்ளுகிறேன்!" என்று பலமாகக் கத்தினான் பையன்.



பரிசுத்தத்துடன் புஷ்டி நிறைந்த க்ளாக்ஸோவை குழந்தைக்கு ஊட்டுங்கள்.

......கை படாதது......

இரும்புத் தாதுவும் வைடமின் D-யும் ஒருங்கே கொண்டது.

**Glaxo**

**குழந்தை ஆகாரம்**

இந்தியாவுக்கு சோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

ஹெச். ஜே. பாஸ்டர் அன் கோ லிட்., பம்பாய் - கல்கத்தா - மதராஸ



# குற்றாலத்திலே...

துஷ்யந்தன்

குற்றாலம்.

நண்பன் சோமுவுக்கு,

நமஸ்காரம். இங்கு வந்தவுடனேயே கடிதம் எழுதாததற்காக மன்னித்து விடு. இந்தக் குற்றத்திற்கு நான் பொறுப்பாளியாக மாட்டேன். குற்றாலம்தான் என்னை அப்படி மயக்கி விட்டது. இதற்குமுன் எத்தனையோ பேர் சொல்லக் கேட்டிருக்கிறேன்; நானும் எப்படி எல்லாமோ கற்பனை செய்து பார்த்திருக்கிறேன். ஆனால் இப்போதுதான் தெரிகிறது, என் கற்பனை எவ்வளவு மட்டமானது என்று. ஆமாம், குற்றாலத்தின் அழகு கற்பனைக்குக் கூட எட்டாதது! அதன் அழகைப் பற்றி எழுதினால் உனக்குத் தெரியாது. இங்கு வந்து அநுபவித்துப் பார்த்தால்தான் தெரியும். ஏன், நீயும் மதனியும் இங்கு வந்துதான் பாருங்களேன்!

மறந்தே போய்விட்டேன். நீ என்னவெல்லாமோ சொல்லி யனுப்பினாயே, ஞாபகமிருக்கிறதா? ... ஆமாம், 'குற்றாலத்துக் குளிர்ச்சியிலே காதல் பிறந்துவிடும்' என்று மதனிகூடப் பரிகாசம் செய்தாளே! ஆனால், அப்படிப்பட்ட 'ஆபத்து' ஒன்றும் இதுவரை வரவில்லை.

நான்கூட எங்கெல்லாமோ தேடிப் பார்த்தேன். ஒரு 'காதலி' எங்கேயாவது திடீரென்று வரமாட்டாளா, என்று! ஊஹூம், காணோம். என் அதிர்ஷ்டமோ அல்லது அந்தக் காதலியின் துரதிர்ஷ்டமோ! என் கண்ணில் இதுவரையில் எந்தக் காதலியும் தென்படாமலேயிருக்கிறாள்.

ஆகவே இது வரையில் நான் ஒரு 'காதலன்' ஆகவில்லை. வெறும் கோபாலனாகத்தான் இருக்கிறேன்.

வேறு விசேஷமில்லை.

கோபாலன்.

## 2

குற்றாலம்.

ஜானகி,

நேற்றுத்தான் இங்கு வந்து சேர்ந்தோம். வந்தவுடனே எழுதவேண்டு மென்றுதான் நினைத்தேன், ஒழியவில்லை. எப்படி ஒழியும்?

எத்தனை தரம் இந்த நீர் வீழ்ச்சியில் குளித்தாலும் ஆசை விடமாட்டேன் என்கிறது. நம் ஊர் ஆற்றங்கரையைத் தவிர வேறெதையுமே கண்ணால் கூடப் பார்க்காத உனக்கு இதை எப்படி விளங்கும்படிச் சொல்லுவது? இந்தச் சுகம் சொல்லித் தெரிவதல்ல. நீ உன் அகத்துக் காரரோடு இங்கே வாயேன்; கொஞ்ச நாளாவது சந்தோஷமாக இருக்கலாம்.

நான் வரும்போது நீ சொன்னது எனக்கு மறக்கவே மறக்காதடி! 'குற்றாலத்திலே எல்லா நோயும் தீர்ந்துடும். ஆனால் காதல் நோய் வந்துவிடாமல் பார்த்துக் கொள்ளவேணும்' என்று நீ சொன்னாயே, நல்ல வேளையாக அப்படிப்பட்ட நோய் ஒன்றும் இதுவரை எனக்கு வந்துவிடவில்லை.

கதைகளிலே இருக்கிறமாதிரி காதல் வரும் கட்டங்கள் இங்கே நிறைய இருந்தாலும் அந்தக் 'காதல்' என்னை இதுவரை

வந்து பிடித்துக் கொள்ளவில்லை. என்னமோ 'வெண்ணிலவு காயும் போது, மந்தமாருதம் வீசும் போது' என்றெல்லாம் சொல்லுகிறார்களே யொழிய ஒன்றையும் காணோமே!

அது சரி, நீ எப்போது இங்கே வரப்போகிறாய்?

சகுந்தலா.

3

குற்றாலம்.

சோமுவுக்கு,

காலம் வெகு சீக்கிரம் மாறி விடுகிறது, மனிதனைப் போல. இப்போது எனக்கு இந்தக் குற்றாலத்துக் குளிர்ச்சியிலே மனது போகவில்லை. அதன் அழகும் என்னை மயக்கவில்லை. காரணம் நீ சொல்லியனுப்பியபடி என்னைக் 'காதல்' பிடித்துக் கொண்டு விட்டதுதான்!

படிக்கும்போதே நீ சிரிக்கிறாயல்லவா? — ஆமாம், உனக்கென்ன? நான்கூட முன்னெல்லாம் 'காதல்' என்றதும் சிரித்து விடுவேன். ஆனால் இப்போது ......!

நேற்று சாயந்திரம் கோவிலுக்குப் போனேன். வெள்ளிக்கிழமை வழக்கமாகப் போவது போலத்தான் போனேன். ஆனால் அங்கேதான் அவளைப் பார்த்துவிட்டேன்!

அவள் பெயர் சகுந்தலாவாம். அவள் பெயரே போதுமடா! காளிதாஸன் அந்தப் பெயருக்கே ஒரு தனி அழகைக் கொடுத்து விட்டான். என்ன அழகான பேர்!

அவளும் பக்கத்து வீட்டுக்குத் தான் வந்திருக்கிறாள். இன்னும் கல்யாணம் ஆகவில்லை......

இந்தச் சமயத்தில் அப்பாவிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. அவர் எங்கேயோ ஒரு பெண் பார்த்திருக்கிறாராம். பெண்ணின் தகப்பனார் சர்க்கார் உத்தியோகஸ்தராம். நல்ல இடம், நிறையச் செய்வார்கள் என்றெல்லாம் எழுதித் தள்ளியிருக்கிறார். நிச்சயம்





தகப்பனார்:—ஏண்டா, தம்பி! கொஞ்சம் கூடத் தங்கையின் ஞாபகமே இல்லாமல் பக்ஷணத்தை யெல்லாம் நீயே தின்று விடுகிறாயே!

பையன்:—இல்லையே! ஒவ்வொரு நிமிஷமும் தங்கை எங்கே வந்து விடப் போகிறாளோ என்று நினைத்துக் கொண்டல்லவா தின்கிறேன்!

---

முடித்து விடுவார்போல இருக்கிறது. அவருடைய பிடிவாதம்தான் உனக்குத் தெரியுமே!

கோபாலன்.

4

அன்புள்ள ஞானமிக்கு,

உன் வாயில் சர்க்கரைதாண்டி போடணும்! ஆனால் இங்கே விழும் நீர்வீழ்ச்சியிலோ வெறும் ஜலம்தான் கொட்டுகிறது!

நேற்று கோவிலுக்குப் போனேன். சொல்லக்கூட வெட்கமாயிருக்கிறது; உன்னிடம் சொன்னால் என்ன என்று சொல்லுகிறேன். அங்கேதான் 'அவ'ரைப் பார்த்தேன். அதிலே யிருந்து என் உடம்பை என்னமோ பண்ணுகிறது, மனசு நான் சொல்கிறபடி கேட்கமாட்டேன் என்கிறது!

என்னடி, இதைப் படித்ததும் நீ விழுந்து விழுந்து சிரிக்கிறாயா?—ஆமாம், சிரிக்காமல் வேறு என்னதான் செய்வாய்?

இந்தச் சமயத்திலே அப்பா எனக்கு ஒரு 'மாப்பிள்ளை'யைத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறார். நல்ல இடம் என்று சொல்லி ஒரேயடியாய்க் குதிக்கிறார். இப்போது நான் என்னடி செய்கிறது?

சகுந்தலா.

5

குற்றாலம்

சோமு,

நாம் நினைக்கிறபடி எதுவுமே நடக்கிறதில்லை. இதைத்தான் தலையெழுத்து விதி, பிராப்தம், என்று என்னவெல்லாமோ சொல்கிறார்கள்போலிருக்கிறது!

குழம்பிக் கிடந்த மனதை உற்சாகப்படுத்தி ஏமாற்றலாம் என்று நேற்று நான் வெளியே போனேன். மனதை எங்கேயோ விட்டுவிட்டுக் கால்கள் போன வழியே போய்க் கொண்டிருந்தேன். இப்படியே எவ்வளவு தூரம் போனேனோ, தெரியாது. 'களுக்'கென்ற சிரிப்பொலி காதில் விழுந்ததும் திரும்பிப் பார்த்தேன். 'அவ'ளும் அவள் தகப்பனாரும் பின்னால் வந்துகொண் டிருந்தார்கள். எங்களுக்கு முன்னே எதிர்ப்புறத்தில் கும்பகோணத்துப் பேர்வழி ஒருவரும் வந்து கொண்டிருந்தார். வந்தவர், "அடடே, கோபாலனா! எங்கேடா வந்தே? நம் வீட்டுப் பக்கம் வரப் படாதோ?" என்று விசாரித்துவிட்டு அவள் தகப்பனார் பக்கம் திரும்பினார்.

"வாங்கோ, ஸார்! பார்த்து ரொம்ப நாளாச்சு!" என்று பேசுவதற்கு ஆரம்பித்தவர் விடவே யில்லை. இப்படி இரண்டு கிழங்களும் பேசுவதைப் பார்த்துவிட்டு நான் மெதுவாக நழுவிக் கோவில் பக்கம் போனேன். அடேயப்பா! இந்தப் பெண்களுக்குத்தான் எவ்வளவு துணிச்சல்? கோவிலுக்குள் அவளும் வந்து விட்டாள்!

என்னவோ எனக்கும் ஒரு அசட்டுத் துணிச்சல் வந்துவிட்டது. சட்டென்று அவள் நின்ற பக்கம் போய் நின்றேன்.

"நாளை ஊருக்கு......" என்று இழுத்தாள் அவள்.

"அதற்குள்ளேயா!" என்று மென்று விழுங்கியபடி கேட்டேன்.

"ஆமாம், எனக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டது......!"

இதைச் சொல்லி முடிப்பதற்குள் அவள் கண்ணீர் உகுக்க ஆரம்பித்து விட்டாள்.

னைக்கு எப்படியிருக்கும்? நீயே யோசித்துப் பார்!

கோபாலன்.

6

குற்றாலம்.

ஜானகி,

கனவில் கூட இப்படி நடக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை; எல்லாம் அதிசயமாய்த்தான் இருக்கிறது!

நேற்று எல்லோரும் ஊருக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். என் மனசு கேட்கவில்லை. நான் மெல்ல தோட்டத்துப் பக்கம் வந்தேன்.

என்னத்தைச் சொல்கிறது? வந்ததும் அப்படியே நின்றுவிட்டேன். வைத்தடிக் கல்லுப் பிள்ளையார் மாதிரி 'அவர்' நின்று கொண்டிருந்தார். நான் வருவேன் என்று அவருக்கு எப்படித்தான் தெரியுமோ?

"ஊருக்குப் போகிற அவசரத்திலே என்னை மறந்து விட்டாயோ?" என்றார்.

நான் மௌனம் சாதித்தேன்.

"சரி, என்னை நினைக்காவிட்டாலும் குற்றாலத்தையாவது நினைப்பாயல்லவா?" என்றார் மீண்டும்.

இந்தச் சமயத்தில் அம்மா கூப்பிட்டுத் தொலைத்தாள்; பேசாமல் உள்ளே வந்து விட்டேன்.

வீட்டில் ஒரே அமர்க்களம். யாரோ ஒருவர் அப்பாவோடு பேசிக் கொண்டிருந்தார். "இங்கே, வாடி! மாமனுக்கு நமஸ்காரம் பண்ணு!" என்று அம்மா சொன்னது எங்கேயோ, யாரோ நின்றிருந்து சொல்வதுபோல் கேட்டது. 'இந்தப் பாவிப் பிராமணனை யார் கூப்பிட்டது? பெண் பார்க்க வந்திருக்கிறாராம் பெண்ணை!" என்று நான் வெறுப்புடன் திரும்பினேன்.

இந்தச் சமயத்தில், "இதோ, மாப்பிள்ளையும் வந்து விட்டார்!" என்றாள் அம்மா. 'ஆமாம்' என்று சலித்துக் கொண்டே அறையை விட்டு வெளியே வந்தேன்.

அவ்வளவுதான்; என் இருதயமே நின்றுவிடும்போலிருந்தது. ஏன் தெரியுமா?— 'அவரே' அங்கு உட்கார்ந்திருந்தார்!

அப்புறம் அம்மா சொன்னாள்— 'இவர்' அப்பாதான் முதலில் ஏற்பாடெல்லாம் பண்ணி இவருக்குக் கடிதம் போட்டாராம். இவருக்கு ஒன்றுமே தெரியாதாம். என் அப்பா இங்கே வந்திருப்பதும், இவர் அப்பா வந்தது தெரியாதாம். இப்போதுதான் கேள்விப்பட்டு உடனே ஓடி வந்தாராம், 'இவ'ருக்குப் பெண்ணைக் காட்டலாம் என்று. இனிமேல்தான் காட்ட வேணுமாக்கும்!

அப்புறம் என்ன?— முகூர்த்தம் வைத்தாகிவிட்டது; நீதான் வரவில்லை!

சகுந்தலா.

7

குற்றாலம்.

சோமுவுக்கு,

என்னதான் சொன்னாலும் பெரியவர்கள் பெரியவர்கள்தாண்டா! கல்யாணத் தேதி நெருங்குகிறது. நீ எப்போது இங்கே வருகிறாய்? மதனி இப்போதே கிளம்பட்டும். அப்போதுதான் இன்னும் ஒரு வாரத்திலாவது வந்து சேருவாள்!

என்ன இருந்தாலும் குற்றாலம், குற்றாலம்தாண்டா!

கோபாலன்.

## தர்மராஜாவின் தர்மங்கள்

★

"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம்பதி னாயிரம் நாட்டல்"
"அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி வித்தல்"

என்ற மகா கவி பாரதியாரின் வாக்குப்படி எழுத்தறிவிக்கும் தர்மம்தான் இணையற்ற தர்மமாகும். இதைக் குறிக்கோளாகக் கொண்டு ராஜாக்கள் நிறைந்த ராஜபாளையத்தில் ஏ. கே. டி. தர்மராஜா டிரஸ்டு தோன்றி ஆண் பாடசாலை, பெண் பாடசாலை, தாழ்த்தப்பட்ட சகோதரர்களுக்குத் தனிப் பாடசாலை முதலியவைகளையெல்லாம் ஏற்படுத்தித் திறம்பட நிர்வகித்து வருகிறது. மக்களின் அறிவுக் கண்ணைத் திறந்து வைக்கும் மாபெரும் பணியை மேற்கொண்டிருக்கும் மேற்படி தர்மராஜா டிரஸ்டு மேன்மேலும் செழித்து ஓங்க இறைவன் அருள் புரிவானாக!

# என்ன ஆச்சரியம்!

ஸோமாஸ்

சுந்தரமும் மூர்த்தியும் ஆப்த நண்பர்கள். ஒரு தெருவில் ஒரு வீட்டில் இருவரும் குடியிருந்தார்கள்; ஒரு பள்ளிக்கூடத்தில், ஒரு வகுப்பில் இருவரும் படித்தார்கள்; நண்பர்கள் இருவரும் சேர்ந்தாற்போல் பரீக்ஷை எழுதிச் சேர்ந்தாற்போல் தோல்வி யடைந்து பள்ளிக்கூடத்தை விட்டு வெளியேறினார்கள்.

'அரைகுறைப் படிப்புப் படித்தவர்கள் தான் உலகத்தில் அரும்பெரும் செயல்களைச் சாதித்திருக்கிறார்கள்' என்பது சுந்தரத்தின் திடமான நம்பிக்கை. மூர்த்தியும் அதைத் திடமாக நம்பினான். அந்த நம்பிக்கையின் விளைவாக இருவரும் சேர்ந்து வியாபாரம் செய்ய ஆரம்பித்தனர்.

மூர்த்தி ஊர் சுற்றுவதில் அநுபவம் வாய்ந்தவனாதலால் வியாபார விஷயமாக அவன்தான் வெளியூர்களுக்குப் போக வேண்டும் என்று ஏற்பாடாயிற்று.

இரண்டொரு மாதங்களுக்குப் பிறகு, மூர்த்தி பம்பாய்க்குப் போனான். பம்பாய்க்குப் போன மறு வாரமே அவனுக்குக் கடுமையான நிதித் தகராறு ஏற்பட்டு விட்டது. பம்பாய் நகரத்தில் கையில் காசில்லாமல் ஒரு ஜீவன் அகப்பட்டுக் கொண்டால் அதன் கதி என்னவாகும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

மூர்த்தி, 'டிரங்க் டெலிபோன்' மூலம் சுந்தரத்துக்குத் தன் நிலைமையை அறிவித்தான்.

"ஹலோ! சுந்தரமா? நான்தான் மூர்த்தி. பம்பாயிலிருந்து பேசுகிறேன். பணமெல்லாம் செலவழிந்து விட்டது. உடனே ரூபாய் இருநூறு வேண்டும்!"

"ஹலோ! மூர்த்தி! என்ன! உனக்கு என்ன நேர்ந்து விட்டது?"

"கையில் பணமில்லாமல் தவிக்கிறேன். இருநூறு ரூபாய் தந்தி மணியார்டரில் அனுப்பு."

"ஒன்றும் சரியாய்க் கேட்கவில்லை. கொஞ்சம் பலமாகச் சொல்லு."



"ஹலோ! சுந்தரம்! கவனித்துக் கேள். கையில்... காலணாகூட... இல்லாமல்... நான்... தவிக்கிறேன்... உடனே ...... ரூபாய் இருநூறு...... தந்தி மணியார்டரில்......அனுப்பு......அவசரம்...... அவசரம்......!"

"ஹலோ! என்னப்பா மூர்த்தி! ஒரு வார்த்தைகூடப் புரியவில்லையே!"

"சுந்தரம், நான் பொதுக் கூட்டத்தில் பேசுவதுபோல் மிகவும் பலமாகப் பேசி விட்டேன். இன்னும் பலமாகப் பேசினால் டெலிபோன் சூறாய் வெடித்துவிடும். கையில் காசு இல்லை. இருநூறு ரூபாய் உடனே எனக்கு வேண்டும்!"

"ஹலோ! மூர்த்தி! என்னவோ பொதுக் கூட்டம், பலம், வெடித்துவிடும் என்கிறாயே! ஏது? நீ பிரசங்கம் வேறு புரிகிறாயா, என்ன? பொதுக் கூட்டத்தில் ஏதாவது 'எக்கச்சக்க'மாகப் பேசி விட்டாயா?"

"என்ன மிஸ்டர் சுந்தரம், நீ பேசுவது எனக்கு நன்றாய்ப் புரிகிறது. உனக்கு நான் பேசுவது ஏன் புரியவில்லை? பொதுக் கூட்டமுமில்லை, ஒன்றுமில்லை. பணம் வேண்டும், அப்பா! பணம்! இருநூறு ரூபாய் வேண்டும்! அவசரம்!"

"ஹலோ! என்ன ஆச்சரியம்! டெலிபோனில்தான் ஏதாவது கோளாறு? காதில் ஒன்றுமே விழவில்லையே!"

சுந்தரமும் மூர்த்தியும் பேசுவதைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த டெலிபோன் ஆப்பரேட்டருக்கு ஆத்திரம் பொங்கியது. உடனே அவர் குறுக்கிட்டு, "ஹலோ! மிஸ்டர் சுந்தரம்! உங்கள் நண்பர் பேசுவது என் காதில் நன்றாய்க் கேட்கிறதே! டெலிபோனில் கோளாறு எதுவுமில்லை" என்றார்.

"ஹலோ! ஆப்பரேட்டர் ஸார்! உமக்குத் தெளிவாய்க் கேட்கிற தல்லவா? அப்படியானால் நீர்தான் அவனுக்கு இருநூறு ரூபாய் தந்தி மணியார்டரில் அனுப்பிவையுமே!" என்று கூறிவிட்டு 'டக்' கென்று ரிஸீவரை வைத்து விட்டான், சுந்தரம்.



# வெண்கல விக்கீரகம்

கு. ரா.



காலை ஏழு மணி இருக்கும். தேவராஜுலு வீட்டில் ஒரே இரைச்சலாக இருந்தது.

“காலையில் ஆறு மணிக்கு இருந்த விக்கிரகம் எங்கே போய்விடும்? ஆச்சரியமாக இருக்கிறதே” என்று கூறிக் கொண்டிருந்தார் தேவராஜுலு.

அவருடைய மனைவி அஞ்சலை அம்மாள் “யார் எடுத்துப் போயிருக்க முடியும்? எல்லாம் அந்தப் பால்கார முனியம்மாதான் கொண்டு போயிருப்பாள். அவளும், அவள் திருட்டு விழியும்! எனக்கு அவள்மேல் எப்பொழுதுமே சந்தேகம்தான். இன்று அது தீர்ந்து விட்டது” என்றாள்.

“அப்படித் திடீரென்று சொல்லி விடாதே! எல்லா இடங்களிலும் தேடிப் பார்த்தாயா?......வீணாகச் சந்தேகப்பட்டதாக முடியக் கூடாது” என்றார் தேவராஜுலு.

“வீண் சந்தேகம் என்ன? காலையிலிருந்து ஒருவரும் வீட்டுக்குள் வரவில்லை. முனியம்மாதான் வந்தாள். வேலைக்காரியோ வரவேயில்லை. வேறு யார் எடுத்திருக்க முடியும்?” என்று படபடப்புடன் கூறினாள் அஞ்சலை அம்மாள்.

பிறகு, “நீங்கள் அவர்கள் வீட்டுக்குப் போய் விசாரியுங்கள். அங்கே நிச்சயம் விக்கிரகம் அகப்படும். இத்தனை நேரத்தில் ஒன்றும் செய்திருக்க முடியாது” என்று மேலும் கூறினாள் அந்த அம்மாள்.

தேவராஜுலுவுக்குத் தமது மனைவியின் சந்தேகம் தவறானது என்று தோன்றியது. இருந்தாலும் அவள் சொன்னபடி நடப்பதைத் தவிர வேறு வழி யிருப்பதாக அவருக்குத் தோன்றவில்லை.

நேராகப் பால்கார முனியம்மாளின் வீட்டுக்குச் சென்றார் அவர். வாசலில் அவளுடைய கணவன் ரங்கநாயகுலு உட்கார்ந்திருந்தான். அவன் தேவராஜுலுவைப் பார்த்ததும் எழுந்திருந்து, “என்ன சாமி! பால் இன்னும் கொண்டு வரவில்லையா?” என்று கேட்டான்.

தேவராஜுலு தயக்கத்துடன், “பால் ஊற்றியாயிற்றப்பா!......நான் வேறொரு விஷயம் பேச வந்தேன்......” என்று மேலும் சொல்ல முடியாமல் தயங்கினார்.

“என்ன விஷயம், சாமி?” என்று ரங்கநாயகுலு கேட்டான்.

“இதோ பார், ரங்கநாயகுலு! நம் வீட்டில் இன்று காலையில் ஒரு விக்கிரகம் காணாமற் போய்விட்டது......” என்று ஆரம்பித்தவர் மேலே சொல்லத் தயங்கினார்.

ரங்கநாயகுலுவின் கண்கள் சிவந்தன. தேவராஜுலு கூறத் தயங்கிய விஷயம் அவனுக்குப் புரிந்துவிட்டது.

“என்ன சாமி, என் பெண்ஜாதி எடுத்துக்கொண்டு வந்துவிட்டதாகச் சந்தேகமா! ......ஏ, முனியம்மா! இங்கே வா!” என்று உள்ளே பார்த்தவாறு கூப்பிட்டான்.

“ஏன் கூப்பிட்டே?” என்று கேட்டவாறு முனியம்மாள் வெளியே வந்தாள். அவள் தேவராஜுலுவைப் பார்த்துவிட்டு, “என்ன சாமி வேண்டும்?” என்று கேட்டாள். அதற்கு ரங்கநாயகுலு பதில் சொன்னான்:

“ஐயா வீட்டில் ஒரு விக்கிரகம் காணாமற் போய்விட்டதாம். அதற்காக வந்திருக்கிறாராம். நீ எடுத்து வந்துவிட்டாயோ என்று சந்தேகப்படுகிறார் போலிருக்கிறது.”

“இது என்ன, சாமி, அநியாயம்! நான் ஏன் அந்தப் பாவத்துக்குப் போகிறேன்?... வேண்டுமானால் என் வீட்டைச் சோதனை போட்டுப் பாருங்கள்” என்று அவள் கூறினாள்.

தேவராஜுலுவின் பாடு திண்டாட்டமாகிவிட்டது. சோதனை போட்டாலும்

நன்றாக இருக்காது. போடாமல் வீட்டுக்குப் போனாலும் அஞ்சலை கோபித்துக் கொள்வாள்.

கடைசியில் துணிந்து, சோதனை செய்ய வீட்டுக்குள் நுழைந்தார். பால்காரனும் பால்காரியும் அவருக்கு எல்லா இடத்தையும் சுற்றிக் காட்டினார்கள்.

அங்கிருந்த ஒரு அலமாரியைப் பார்த்த போது தேவராஜுலுவின் கண்கள் அகல விரிந்தன. "இதோ இருக்கிறதே, எங்கள் விக்கிரகம்!" என்று அவர் அதைக் கையில் எடுத்துக் கொண்டார்.

ரங்கநாயுடு அதைப் பார்த்துவிட்டு, "சாமி! அவசரப்பட்டு ஒன்றும் செய்யாதீர்கள். நீங்கள் வைத்திருக்கும் விக்கிரகம் எங்கள் தாத்தா என் அம்மாவுக்குக் கொடுத்தது. யோசித்துச் சொல்லுங்கள்!" என்றான்.

தேவராஜுலுவுக்குக் கோபம் வந்தது. எப்பொழுதுமே அவர் பொறுமைசாலி. ஆயினும் இந்தச் சந்தர்ப்பத்தில் அவரையும் மீறியே கோபம் ஏற்பட்டது. "ரங்கநாயுடு! உண்மையை ஒப்புக் கொண்டு விடுங்கள், உங்களைக் காட்டிக் கொடுக்க மாட்டேன்!" என்றார்.

முனியம்மாளுக்கும் கோபம் வந்து விட்டது. "சாமி, நீங்கள் இப்படி யெல்லாம் பேசக் கூடாது. எந்த தெய்வத்துக்கு முன் வேண்டுமானாலும் சத்தியம் செய்கிறோம். இது எங்கள் வீட்டில் ரொம்ப நாளாக இருக்கிறது. ஒரு வேளை உங்கள் வீட்டு விக்கிரகம் இதைப் போல் இருந்தால் அதற்கு நாங்களா பொறுப்பு?" என்றாள் படபடப்புடன்.

"முனியம்மா! நான் ஒன்றும் அவசரப்பட்டுச் சொல்லிவிடவில்லை. இதோ பார், இந்த விக்கிரகத்தின் அடிப் பாகத்தில் என் தாத்தாவின் பெயரின் முதலெழுத்தான 'க' இருக்கிறது. இதற்கு என்ன சொல்கிறீர்கள்?" என்றார் தேவராஜுலு.

"நன்றாக இருக்கிறதே, நியாயம்? என் தாத்தாவின் பெயரான கணபதி நாயுடுவின் முதல் எழுத்தையல்லவா அது குறிக்கிறது!" என்றான் ரங்க நாயுடு.

தேவராஜுலு விரிந்த கண்களுடன், "என்ன, வேடிக்கையாக இருக்கிறதே நீ சொல்வது! உன் தாத்தாவின் பெயரும் கணபதி நாயுடுவாக இருப்பதை இந்தச் சமயத்தில் உபயோகித்துக்கொள்ளப் பார்க்கிறாயா?" என்று ஏளனமாகக் கேட்டார்.

ரங்கநாயுடு மிகக் கோபமடைந்தான். "சாமி! நாங்கள் சொல்வதைச் சொல்லி விட்டோம். இனி மரியாதை கெட்டுவிடும், ஜாக்கிரதை!" என்று உறுமினான்.

"என்னப்பா, ரொம்ப பயமுறுத்துகிறாய்?" என்றார் தேவராஜுலு. முனியம்மாளைத் திகில் பற்றிக் கொண்டது. அவளுடைய கணவனின் குணம் அவளுக்குத் தெரியும். கோபம் மீறி விட்டால் அவன் கொலை செய்யவும் தயங்கமாட்டான். ஏதாவது விபரீதம் நேர்ந்துவிடப் போகிறதே என்று அஞ்சிய முனியம்மாள் தேவராஜுலுவைப் பார்த்து, "சாமி! வேண்டுமென்றால் எங்களைக் கேட்டு அதை எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் எங்களுக்குத் திருட்டுப் பட்டம் மட்டும் வேண்டாம். இவ்வளவு நாள் யோக்கியமாகப் பிழைத்து விட்டோம்" என்று கூறினாள்.

ரங்கநாயுடு அவளை விழித்துப் பார்த்தான். "அந்தப் பேச்சை மட்டும் விட்டு விடு. கேட்டாலும் அந்த விக்கிரகத்தைத் தர முடியாது. அது நம் குல தெய்வம். நாம் உயிரோடு இருப்பதற்கே அதுதான் ஆதாரம்!" என்று உறுமினான்.

தேவராஜுலு முனியம்மாளைப் பார்த்து, "என்ன சொல்கிறாய்? உண்மை வெளிப்பட வேண்டுமா?" என்றார். அவள் கைகளைப் பிசைந்தாள்.

"அதோ அந்தப் படத்திலிருக்கும் என் தாய் தகப்பன் மீது ஆணை! இந்த விக்கிரகம்



இந்த வீட்டை விட்டு நகர்ந்தால், என்ன நேரும் என்று சொல்ல முடியாது" என்று ரங்கநாயகுலு கர்ஜித்தான்.

எதேச்சையாக அவன் காட்டிய படத்தை நோக்கினார் தேவராஜுலு. அவருடைய கையிலிருந்த வெண்கல விக்கிரகம் 'டணால்' என்ற ஓசையுடன் கீழே விழுந்தது.

"முனியம்மா! இது என்ன? இந்தப் போட்டோ இங்கே எப்படி வந்தது?......" என்று மேலே சொல்வதற்குள் கீழே உட்கார்ந்து விட்டார். அவருக்குத் தலை சுற்றியது.

"சாமி! சாமி! உங்களுக்கு என்ன?" என்று அவரைத் தாங்கிக் கொண்டான் ரங்கநாயகுலு. முனியம்மாள் உள்ளே ஓடிச் சூடான பால் கொண்டுவந்து அவருக்குக் கொடுத்தாள். அதைக் குடித்து விட்டுச் சிறிது நேரம் பேசாமலிருந்தார் தேவராஜுலு. அவர் மனதில் ஏதோ பழைய ஞாபகங்கள் சுழன்றன.

"ரங்கநாயகுலு! உண்மையைச் சொல். அந்தப் படத்தில் இருப்பது உன் தாய் தந்தையர்களா?" என்று கேட்டார்.

"சாமி! இன்று உங்களுக்கு என்னமோ மனசு சரியில்லை போல் தோன்றுகிறது. அது என் தாய் தந்தைதான். அதில் உங்களுக்குச் சந்தேகமென்ன?" என்றான் ரங்கநாயகுலு.

"உன் தந்தையின் பெயர் என்ன?" என்று கேட்டார் தேவராஜுலு.

"ரத்னவேலு நாயுடு!" என்று அவன் கூறிய பதிலைக் கேட்டதும், தேவராஜுலுவுக்கு மறுபடியும் மயக்கம் வரும் போலிருந்தது.

இருந்தாலும் அவர் சமாளித்துக்கொண்டு "அப்பா, ரங்கநாயகுலு! எனக்கு ஒன்றுமே புரியவில்லை. எல்லாம் குழப்பமாயிருக்கிறது...உன் தாத்தாவின் பெயர், உன் அப்பாவின் பெயர் எல்லாம் என் தாத்தா, என் அப்பாவின் பெயராகவேயிருக்கிறது. படத்திலுள்ள உன் தந்தை என் தந்தையைப் போலவேயிருக்கிறார். விக்கிரகமும் உன்னுடையது என்றால், என்னிடமும் அதேமாதிரி விக்கிரகம் இருக்கிறது......இதில் ஏதோ விசேஷம் இருக்கிறது. உன் அப்பா எங்கே இருக்கிறார்?" என்று கேட்டார்.

ரங்கநாயகுலு பதில் சொன்னான்:

"என் அப்பாவை எனக்குத் தெரியவே தெரியாது. என் சிறு வயதிலிருந்தே என் தாயார்தான் என்னை வளர்த்தாள். அவள் நான்கைந்து வருஷங்களுக்கு முன்னால் இறக்கு முன் இந்த விக்கிரகத்தையும், அந்தப் போட்டோவையும் என்னிடம் கொடுத்து, போட்டோவிலிருப்பது என் தந்தையும், தானும் என்றும் கூறினாள். விக்கிரகத்தைத் தந்தையின் ஞாபகார்த்தமாக நான் பாதுகாக்க வேண்டுமென்றும் சொல்லிக் கொடுத்தாள். பிறகு நான் தந்தையைப் பற்றி வற்புறுத்திக் கேட்ட பிறகு இன்னொரு விஷயமும் கூறினாள். நான் ஆறுமாதக் குழந்தையாக இருந்தபோது என்னையும் என் அன்னையையும் என் தந்தை கோபத்தினால் வீட்டை விட்டு விரட்டி விட்டாராம். அன்னையும் என்னுடன் வேறு ஊர் வந்து என்னை வளர்த்தாளாம். என் தந்தையை நான் நேரில் சந்திக்கவே கூடாதென்றும், காரணம் கேட்கக் கூடாதென்றும், போட்டோவையும் விக்கிரகத்தையும் தந்தையாகக் கருதினால் போதும் என்றும் கேட்டுக்கொண்டாள். நான் வேறு கேள்விகள் கேட்கும் அவசியமில்லாமல் அவள் இறந்துவிட்டாள். அதுமுதல் இந்த இரண்டையும் கொண்டு நான் படிப்படியாக முன்னுக்கு வந்தேன். என் அன்னை கொடுத்த விக்கிரகம்தான் இது!" என்று கூறி முடித்தான்.

தேவராஜுலு கண்களில் நீர் வழிய, "தம்பீ!" என்று அவனை அணைத்துக் கொண்டார். ரங்கநாயகுலுவுக்கும் முனியம்மாளுக்கும் ஒன்றும் புரியவில்லை. தேவராஜுலு சந்தேகத்தை நிவர்த்தி செய்தார்.

"தம்பீ! நம் தந்தை பத்து வருஷங்களுக்கு முன் இறந்து போனார். அவர்




ஒருவர்:—என் சுவாமி! பைரவியைப் பிடித்து ஆனந்த பைரவி என்கிறீர்களே!

மற்றவர்:—பைரவியை ரொம்ப ஆனந்தமாய்ப் பாடினார். அதனால் ஆனந்த பைரவியா இருக்குமோ என்று சந்தேகப் பட்டேன்.

இறப்பதற்கு முன் என்னை அழைத்துச் சில விஷயங்களைக் கூறினார். எனக்கு ஆறு மாத மாகும்போது என் அன்னை இறந்து விட்டாளாம். என்னை வளர்ப்பதற்காக உன் அன்னையை இரண்டாந் தாரமாக மணந்து கொண்டாராம். ஒரு வருஷத்தில் நீ பிறந்தாயாம். நீ பிறந்து ஒரு வருஷத்திற்குள் அக்கம் பக்கத்தார் பேச்சைக் கேட்டுக்கொண்டு உன் அன்னை என்னைச் சரியாகக் கவனிப்பதில்லை என்றும், கொடுமைப் படுத்துவதாகவும் எண்ணி உங்களிருவரையும் விரட்டி விட்டாராம். காலடைவில் கோபம் தணிந்து, அமைதி ஏற்பட்டவுடன் சிந்தித்துப் பார்த்து, தம் பிழையை உணர்ந்தாராம். எவ்வளவு தேடியும் நீங்கள் அகப்பட வில்லையாம். உங்களைப் பற்றிய நினைவிலேயே அவர் உருகி உடல் நிலையை மோசமாக்கிக் கொண்டார். பத்து வருடங்கள் அவர் படுத்துக் கொண்டிருந்து விட்டு இறந்து போனார். எனக்கு எல்லா வற்றையும் கூறி, இந்தமாதிரி விக்கிரகத்தையும் கொடுத்தார். 'இதைப் போலவே விக்கிரகம் வைத்திருப்பவர்களைக் கண்டால் அவர்கள் உன் அன்னையும் சகோதரனும் என்று தெரிந்துகொள். அதுவரை இதையே உன் அன்னையாகவும் சகோதரனாகவும் பாவி' என்று கூறிவிட்டுச் சென்றார். விக்கிரக ஜோடியில் ஒன்றைக் கொண்டுதான் இன்று உன்னை அறிந்து கொண்டேன். ஆனால் அன்னைதான் போய்விட்டாள்'' என்றார்.

அவர் கண்களில் நீர் சுரந்தது.

அப்போது ஒரு ஆள் அங்கே வந்து, "இங்கே தேவராஜுலு இருக்கிறாரா?" என்று கேட்டான்.

"என், என்ன விஷயம்?" என்று கேட்டுக்கொண்டு வெளியே வந்தார் தேவராஜுலு.

"அம்மா உங்களை உடனே வரச்சொன்னார்கள். காணாமற்போன விக்கிரகம் தோட்டத்தில் இருந்ததாம். பூனையோ, எலியோ கொண்டுபோய் போட்டுவிட்டிருக்க வேண்டும் என்று சொல்லச் சொன்னார்கள்'' என்றான் அந்த ஆள்.

தேவராஜுலுவும், அவருடைய தம்பியும், முனியம்மாளும ஒருவரைப் பார்த்து ஒருவர் புன்னகை புரிந்தார்கள். கீழே விழுந்து சிறிது நசுங்கிப் போயிருந்த வெண்கல விக்கிரகம்—அவர்களை மறுபடியும் ஒன்று சேர்த்துவிட்ட பெருமையுடன்—அவர்களைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது.

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 228. என்னை நோக்கி வரவா செய்வான்!

மனித உள்ளமானது ஒரு நிலையிலிருப்பதல்ல. நேற்று, நன்றாய் உவந்ததாய் இருந்த காரியம், இன்று ஒரே வெறுப்பாய்ப் போய் விடுகிறது.

சாமானிய உள்ளம் இப்படியிருக்கிறதென்றால் சீதையின் உள்ளத்தைப் பற்றிச் சொல்லுவானேன்:

சீதையின் நொந்த உள்ளத்தில் என்ன என்ன எண்ணம் எல்லாமோ உண்டாகிறது. நம்பிக்கைக்குள் நம்பிக்கை இன்மையும் உதிக்கிறது!

உயிர் துறக்கவே நேரும் என்ற எண்ணம் வருகிறது. என்ன செய்வாள் அவள்?

ஈண்டு நான்இருந்(து)
  இன்னுயிர் மாயினும்
மீண்டு வந்து
  பிறந்துதன் மேனியைத்
தீண்ட லாவதோர்
  தீவினை தீர்வரம்
வேண்டி னான்தொழு(து)
  என்றுவி ளம்புவாய்.

[ஈண்டு நான் இருந்து இன்னுயிர் மாயினும்: மீட்கப்படாமல் இங்கேயே நான் இருக்க நேரும், அது காரணமாக உயிரை மாய்த்துக் கொள்ளவே நேரும். அப்படி இறந்துபோன பிறகு: மீண்டு வந்து பிறந்து: மறுபடியும் இந்த உலகில் வந்து பிறந்து: தன் மேனியைத் தீண்டல் ஆவதோர்: ராமனது மேனியை அணையும்படியான: அரிய தீவினை தீர்வரம்: பாவங்களை எல்லாம் போக்கும்படியான வரத்தை: வேண்டினான் தொழுது: தொழுத வண்ணமாய்ப் பிரார்த்தித்தான்; என்று விளம்புவாய்: என்பதாக ராமனிடம் விண்ணப்பிப்பாய்.]

* * *

சீதைக்கு ஒரே ஒரு தணியாத ஆசை. ராமன் அயோத்திக்குப் போவான். ஒரே கோலாகலமாய் வரவேற்பு முதலியவைகள் நடக்கும். அதைக் கண்குளிர பார்க்கவேண்டும் என்பதுதான். அந்த எண்ணம் அவளது உள்ளத்தில் இடை இடையே வந்து துடிக்கும்.

அரசு வீற்றிருந்(து)
  ஆளவும், ஆய்மணிப்
புரசை யானையின்
  வீதியிற் போகவும்,
விரசு கோலங்கள்
  காணவி தியிலேன்
உரைசெய்(து) என்னைகொல்,
  ஊழ்வினை உன்உளேன்.

[அரசு வீற்றிருந்து: அரச தோரணைக்குரிய சிம்மாசனத்தில் வீற்றிருந்து: ஆளவும்: அரசியல் நிர்வாகம் செய்து: ஆய்மணிப் புரசை யானையின்: அரிய ரத்தின வடங்களைக் கழுத்தில் அணிந்த யானையின்மீது இருந்து கொண்டு: வீதியிற் போகவும்: ஊர்வலம் போகிற அழகையும்: விரசு கோலங்கள்: இவைகளோடு ஒட்டிய அலங்காரங்களை எல்லாம்: காண விதியிலேன்: கண்டு அநுபவிக்கும்படியான பாக்கியம் இல்லாதவள் நான்: உரை செய்து என்னை கொல் ஊழ்வினை உன் உளேன்: ஊழ்வினையின் கொடுமைக்குள் அகப்பட்டவளாகிய நான் என்னத்தைப் பேசி என்ன செய்ய?]

குறிப்பு :—ஆடவர்களுக்குரிய அரச தோரணைகள், லாவகங்கள் முதலியவற்றில் பெண் பாலருக்கு மிக்க ஈடுபாடு என்பதை இன்றும் காண்கிறோம்.

* * *

அனுமனோடு இவ்வாறெல்லாம் இதயம் நைந்தவளாய்ப் பேசுகிறாள் சீதை. பேசப் பேச ராமன் வர மாட்டான் மீட்க மாட்டான் என்ற எண்ணம் மேலிடுகிறது. அந்த மேலீட்டினால் ஒரே சோர்வுக்கு மனம் உள்ளாகிறது. அந்தச் சோர்வானது வேறு காரணம் கற்பிக்கிறது.

தன்னை நோக்கி
உலகம்த ளர்தற்கும்,
அன்னை நோய்க்கும்,
பரதன் அங்(கு) ஆற்றும்
இன்னல் நோய்க்கும்அங்(கு)
ஏகுவ(து) அன்றியே
என்னை நோக்கிஇங்(கு)
எங்ஙனம் எய்துமோ?

[தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்: ராமன் வரவில்லையே வரவில்லையே என்று அயோத்தியிலுள்ளவர்கள் எல்லாரும் ஏங்கிச் சோர்கிறார்கள். இது ராமனுக்குத் தெரியும். அன்னை நோய்க்கும்: கோசலை வருந்துகிறாள் என்று சொல்லுகிறது! தாங்க முடியாத ஒரு நோய்க்கு உள்ளாகி யிருக்கிறாள் என்று தானே ராமன் எண்ணவேண்டும். இதற்கு மேல்—பரதன் அங்கு ஆற்றும் இன்னல் நோய்க்கும்: பரதன் பெருந் துன்பமாகிய நோயைச் சகித்துக்கொண்டிருக்கிறான், தனக்காகத்தான். ராமன் அறியாத காரியமா இது? இவ்வளவையும் எண்ணினால் அயோத்தியைப் பார்த்துப் போவானே ஒழிய, ஒன்றுக்கும் உதவாத என்னைப் பொருட்படுத்தி இங்கே எப்படி வருவான்?]

கவியில் **எளிமை** என்றால், எளிய முறையில் அபூர்வமான உணர்ச்சியைப் பிறக்கச் செய்வதுதான். எளிமை என்கிற உத்தியைக் காண வேண்டுமானால் கம்பரிடம் போகவேண்டும்.

செய்யுளைப் பாடப் பாட எளிமை விளங்கும். அதோடு உள்ளக் கனிவும் புலனாகும். எளிமை, உணர்ச்சி, பாவம் எல்லாம் கலந்த கவி உருவத்துக்கு மேலே கண்ட செய்யுள் ஒரு அரிய எடுத்துக் காட்டு.

# வண்டிக்காரன்

கி. முத்துசாமி

சுடும் வெயில்; சுற்றுப்புறத்தில் அனல் கக்கும் காற்று வேறு. சற்று ஒண்டுவதற்குக் கூட எங்கும் நிழலில்லை. இந்த வேளையில் தான் ஞானகிராமன் விதியை நினைத்துக் கொண்டு வீட்டை விட்டுக் கிளம்பும்படி ஆயிற்று.

ஞானகிராமனுக்கு அழுகையும் ஆத்திரமுமாக வந்தது. சாதாரணமாகவே, அவன் முன் கோபி. அத்துடன், அப்பொழுது தான் அலைந்து திரிந்து விட்டு வீட்டில் அடிவைத்திருந்தான். இந்த நிலையில் அவனது முதலாளி உடனே தன்னை வந்து பார்க்கும்படி அவனுக்கு உத்தர விட்டிருந்தார். இரண்டு தினங்களாக வசூலான அந்த நானூறு ரூபாய்ச் சில்லறையை ஒரு பைக்குள் போட்டுக் கட்டிக் கொண்டு கிளம்பினான்.

அவனது நல்ல காலமோ, பொல்லாத காலமோ, அவன் வீட்டிற்குச் சமீபத்திலேயே ஒரு குதிரை வண்டி நின்று கொண்டிருந்தது. ஞானகிராமன் அதன் சமீபமாக வந்த பொழுது சற்று பயந்து விட்டான்! வண்டிக்கார முனியனின் தோற்றம்-சாட்சாத் முனீசுவரனுகவே இருந்தது! அவனது பெரிய சிவந்த விழிகள், கருண்ட மீசை, வாட்ட சாட்டமான தேகம்—எல்லாம் பார்க்கச் சற்று அச்சமாகத் தானிருந்தது!

"நாணயக்காரத் தெருவுக்கு என்னப்பா கேட்கிறே?" என்று வழக்கமாகக் கேட்கும் மிடுக்கான குரலில் கேட்டான் ஞானகிராமன்.

முனியன் அவனை ஒரு தரம் ஏற இறங்கப் பார்த்துவிட்டு "ஒன்னரை ரூவா கொடுங்க!" என்றான். அவனது குரலிலும் அலட்சியம் பிரதிபலித்தது!

வெளி உஷ்ணத்தை விட இந்தத் தொகை கடுமையாக இருந்தது ஞானகிராமனுக்கு. சுற்று முற்றும் பார்த்து விட்டு, "நீ தான் கேட்கிறியா?" என்றான்.

"ஏன், நான் கேட்காம, பின்னே யாருன்னு நினைச்சே?"

முனியனின் அலட்சியம் நிறைந்த தொனி ஞானகிராமனின் கோபத்தைக் கிளறி விட்டது. "கோவிச்சுக்காதே! எனக்கும் ஆண்டவன் கொடுத்த காது இருக்குது. ஒன்னரை ரூவான்னு வாய் கூசாமச் சொல்லிட்டியே, சும்மாத்தான் இருக்குதோ? இல்லே, என்கிட்டே பரியாசம் பண்றியோ?"

"ஒனக்கு மூளை இருக்குதாய்யா? இந்தக் காலத்திலே கொள்ளு என்ன விலை விக்கிது; புல்லுக்கட்டு என்ன விலை விக்கிதுன்னு ஒனக்குத் தெரியுமாய்யா? முன்னைப் பின்னே தெரியாத ஒங்கிட்ட எனக்கு என்னய்யா பரியாசம்? ஒரே பேச்சு—ஒன்னே கால் ரூவா கொடுக்க முடியுமாய்யா? எங்கிட்ட கண்டிப்புன்னு கண்டிப்புத்தான்!" என்றான் வண்டிக்கார முனியன்.



"ஒரு ரூவா கொடுப்பேன்-இஷ்டமா?" என்றான் ஞானகிராமன்.

முனியனின் பார்வை-அவனை எரித்து விடுவது போலிருந்தது! ஆனாலும்—பாவம்! அவனுக்கும் குதிரைக்கும் காலை முதல் ஒரு வழியும் பிறக்கவில்லையே, என்ன செய்வான்?

"சரி, சரி, ஏறித் தொலைய்யா! இதே ரோதனையாப் போச்சுது. இன்னக்கி முழிச்ச மகராசன் முகத்திலேயே தெரியும் முழிக்கனும். எதிராளி கஷ்டத்தையே பார்க்காத பாழும் சனம்!"

ஞானகிராமனுக்கும் அந்த வெய்யில் வேளையில் — அந்த முரடனைத் தவிர வேறு

வழியில்லை! ஏறி உட்கார்ந்தான். வழி நெடுக முனியனின் சரமாரியான சொற்களினால் அவனுக்குத் தலைவலி கூட எடுத்துவிட்டது. தெற்கு வீதி வந்ததும், வண்டியை நிறுத்தச் சொல்லி விட்டுக் கீழே இறங்கிக் காப்பி சாப்பிடச் சென்றான். மறுபடியும் அவன் வண்டியில் ஏறின பொழுது அவனுடைய தலைவலி அதிகரிக்கத்தான் செய்தது!

ஒரு வழியாக, வண்டிக்காரனுக்குச் சில்லறை கொடுத்துவிட்டு முதலாளியிடம் சென்றான் ஞானகிராமன். கொஞ்ச நேரப் பேச்சிற்குப் பின்—அவன் முகத்தில் விகாரம் கூத்தாட ஆரம்பித்து விட்டது! சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே 'திரு திரு' வென்று விழித்தான். இமைப்பொழுதில் அவன் உடல் வியர்த்து விட்டது. அவன் கொண்டு வந்திருந்த பணப்பையைக் காணோம்!

ஞானகிராமன் பைத்தியம் பிடித்தவன் போல, சைக்கிளை எடுத்துக் கொண்டு கிளம்பினான். தான் காப்பி சாப்பிட்ட இடம் முதல் எல்லாவற்றையும் ஒருமுறை பார்த்து விட்டான். வழியில் தென்பட்ட வண்டிக்காரர்களையெல்லாம் அடையாளம் சொல்லி விசாரித்துப் பார்த்தும்-என்—அதே அடையாளத்துடனிருந்த நாலைந்து வண்டிக்காரர்களையும் கண்டு ஏமாந்து விட்டான்!

உலகமே சுழன்று பூகம்பம் ஏற்பட்டு விட்டதுபோல் அவனுக்குத் தோன்றியது. அந்தக் கணம் 'நானூறு ரூபாய், நானூறு ரூபாய்' என்று ஓயாமல் ஓலமிட்டுக் கொண்டிருந்தது அவனது உள்ளம். முதலாளிக்குக் கூடத் தெரியாத இந்தச் சமாசாரம் வெளியானால் என்னவாகுமென்பதை எண்ணியபோது, அவன் கால்கள் பூமியிலேயே படவில்லை!

2

சூரியன் மேற்கு மலைவாயிலுக்கு வருவதற்கு வெகு நாழிகையாக வில்லை. உடைந்த மனத்துடன் தள்ளாடிக் கொண்டே வீட்டை நோக்கி வந்தான் ஞானகிராமன்.

வீட்டை நெருங்க, நெருங்க அவன் கால்கள் பின்னிக் கொண்டன. ஆனால் அந்த ஒரேக் கணத்தில் அவன் தன் கண்களையும், காதுகளையும் நம்ப முடியவில்லை!

“வா, ஐயா! புண்ணியவானே! நெதம் நெதம் ஒங்கிட்டத்தான் சவாரிக்கி வரணும். இன்னைக்கி காலையிலேயிருந்து உன் ரோதனையே பெரிய ரோதனையாப் போச்சுது! இன்னம் தண்ணிகூடக் குடிக்கல்லே. இந்த மூட்டையை ஏன் ஐயா பாயிக்கு அடியிலே புல்லுக்கட்டோட சேர்த்து வைச்சுட்டே? உன்னைத் தேடிக்கிட்டு மூணுதரம் நாணயக்காரத் தெருவுக்கும் — இதுக்கும் அலைஞ்சா யிடுச்சு. உன் பேராகிலும், தெரிஞ்சாயில்லே? 'சிவப்பா, குள்ளமா, மூக்கு நீண்டவரு' என்றால் யாரு கண்டா? நல்லவேளையா நீ வந்துக்கிட்டிருந்த வீட்டை ஏதோ கவனிச்சிருந்தேன்—இந்தா—இந்தச் சனியனை வாங்கிக்கிட்டு என்னை — ஆளை — விடய்யா!” என்று அவன் போட்ட சத்தம் பெரிய கூட்டத்தையே கூட்டி விட்டது.

ஞானகிராமனுக்கு என்ன சொல்வது, என்ன செய்வது என்றே விளங்கவில்லை! அந்தக்ஷணம் முனியன் அவனுக்குப் பயங்கரமாகக் காட்சி யளிக்கவில்லை! ஞானகிராமன் தன் பையிலிருந்த பத்து ரூபாயை எடுத்து அவனிடம் நீட்டினான்.

“எனக்கு ஏன் ஐயா இதெல்லாம்? மூட்டை சரியா இருக்குதான்னு பார்த்துக்கிட்டு என்னை — ஆளை — விடய்யா, புண்ணியவானே! எங்கிட்டக் கண்டிப்புன்னுக் கண்டிப்புத்தான்!” என்றான் வண்டிக்கார முனியன்.

ஞானகிராமன் முடிந்திருந்தபடியே இருந்தது அந்த முடிச்சு! அதைக் கையில் வாங்கிக்கொண்டு அவன் முனியனை மனமார வாழ்த்தினான்.

## கல்கத்தாவில் காந்தி ஜயந்தி

மாநிலத்தை வாழவைக்கவந்த காந்தி மகாத்மாவின் ஜயந்தி விழாவை 2—10—48 அன்று இந்தியாவிலும் உலகில் பல இடங்களிலும் வெகு சிறப்பாகக் கொண்டாடினார்கள். கல்கத்தாவிலும் பாரதி தமிழ்ச் சங்கத்தார் வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். கல்கத்தாவின் ஷெரிப் ஸ்ரீ டி. என். சென் அவர்கள் காந்தியடிகளின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்து ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். பாரதி தமிழ்ச் சங்கத்தின் தலைவர் ஸ்ரீ சீதாபதி வந்தனோபசாரம் கூற, பாரதியாரின் 'வாழ்க நீ எம்மான்!' என்ற பாடலுடன் விழா இனிது முடிந்தது.

# வட்ட மேஜை

*

சைதாப்பேட்டை
11—10—48

## செல்லாத 'சர்டிபிகேட்'

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

நான் சர்க்காரின் தொழிற் கல்விச்சாலையாகிய "கவர்ன்மெண்ட் ஸ்கூல் ஆப் டெக்னாலஜி" (Government School of Technology) யில் சினிமா ஆப்பரேட்டர்கள் படிப்பும் படித்து பாஸ் செய்தவர்களில் ஒருவன்.

மிகச் சிறந்த முறையில் பயிற்சி பெற்ற கர்ணனுக்கு எப்படி சரியான சமயத்தில் "சாபத்தினால்" அவ்வித்தை பயன்படவில்லையோ அதே போல் ஆப்பரேட்டர்கள் தேவையாயிருக்கும் இக்காலத்தில் எங்கள் வித்தை எங்களுக்குப் பயனற்று இருக்கிறது.

எங்கள் வித்தை பயன்படாமல் போன காரணம் அவர்கள் கொடுக்கும் "ஸர்டிபிகேட்" ஆதாரமற்றது என்பது தான். அந்த ஆதாரமற்ற ஸர்டிபிகேட்டை வாங்க ஒரு வருஷம் பணத்தைக் கொட்டி படித்தோடல்லாமல் ஆறு மாதம் ஏதாவது ஒரு தியேட்டரில் சம்பளமில்லாமல் வேலை செய்ய வேண்டுமாம். சும்மா வேலை செய்வதற்குத் தியேட்டர்காரர் ஆட்டும் ஆட்டத்திற்கெல்லாம் ஆட வேண்டும். "சினிமா வேலைக்காரர் யூனியனில் நீ மெம்பரா?" என்ற முதல் கேள்வியைக் கேட்பார் முதலாளி. பிறகு நீ மூன்று காட்சிகளுக்கும் தவறாமல் வேலை செய்ய வேண்டும் என்று உத்தரவிட்டு விடுவார். நான் யூனியன் மெம்பர் என்றாலோ அல்லது இரவு இரண்டு காட்சிகளுக்கு மட்டும் வேலை செய்கிறேன் என்றாலோ, "எனக்கு ஆள் தேவையில்லை பாப்பா! இப்பொழுது நான் எங்கள் தியேட்டரின் ஆள் குறைப்பு செய்கிறோம்" என்று கூசாமல் கூறி விடுகிறார்கள். மூன்று காட்சிகளுக்கும் வேலை செய்வதானால் வயிற்றில் ஈரத் துணியைச் சுற்றிக் கொண்டு நான் செய்ய வேண்டும். எப்படியாவது எங்காவது தியேட்டரில் நுழைந்து விடலாமென்றாலோ சமீபத்தில் நடந்த ஒரு சம்பவத்தினால் தியேட்டர்காரரிடம் நெருங்கவும் வழியில்லாமல் போய் விட்டது.

எங்களது வேலைத் திறனைக் கேள்வியுற்ற வெளியூர் தியேட்டர் சொந்தக்காரர் ஒருவர் என்னுடன் படித்த எனது நண்பரைத் தம் தியேட்டரில் அமர்த்திக் கொண்டார். வேலையும் எவ்வித குந்தகமுமில்லாமல் சிறந்த முறையில் நடைபெற்று வந்தது. திடீரென ஒரு நாள் தியேட்டருக்கு வந்த "எலெக்ட்ரிகல் இன்ஸ்பெக்டர்" ஒருவர் 'ஸ்கூல் ஆப் டெக்னாலஜி'யில் கொடுத்த ஸர்டிபிகேட் செல்லும் என்பதற்கு ஒரு வித ஆதாரமுமில்லையென்று கூறித் தியேட்டரையே மூடும்படி உத்தரவிட்டுப் போய் விட்டார். பிறகு அந்தத் தியேட்டர் சொந்தக்காரரும் எனது நண்பரும் சென்னைக்கு வந்து எங்கள் ஸ்கூல் பிரின்ஸிபால், ஸூப்பிரண்டெண்ட் முதலியோருடன், இது சம்பந்தப்பட்ட அதிகாரிகளைச் சென்று பார்த்தனர். நாங்கள் ஒன்றும் செய்வதற்கில்லையெனக் கைவிரித்து விட்டனர் அந்த அதிகாரிகள். மிகுந்த கஷ்டங்களுடனும் ஏராளமான செலவுடனும் மறுபடி அந்த தியேட்டர் திறக்கப்பட்டது. ஒரு லைசென்ஸ் பெற்ற ஆப்பரேட்டரை வைத்து இப்பொழுது நடத்தி வருகிறார்கள். இந்தக் காரணத்தினால் மற்றவர்களும் எங்களைக் கண்டு அஞ்சுகிறார்கள். செல்லாத ஸர்டிபிகேட்டினால் நாங்கள் கஷ்டப்படுவது போதாமல் எங்களை நம்பின தியேட்டர்காரர்களும் கஷ்டப்பட வேண்டுமா?

மனமறிந்து நாங்கள் யாரையும் ஏமாற்றி வித்தை கற்கவில்லையே! மிகுந்த கஷ்டத்துடன் எங்கள் தாய் தந்தையர் சம்பாதித்த பணத்தைக் கொட்டிக் கொடுத்தல்லவோ படித்தோம். அப்படியிருக்க எங்கள் கல்வி எங்களுக்குப் பயன்படாமல் போகும் சாபம் எங்களுக்கு ஏன்? எங்களை அச்சாபத்திலிருந்து விடுவிக்க இந்த சர்க்கார் ஏதாவது வழி செய்யுமா?

கி. ராஜகோபாலன்

நா. பழூர்
7—12—48

## 'சர்விஸ் கமிஷன்' கவனிக்குமா?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

நான் சென்னை சர்விஸ் கமிஷன் காரியதரிசியின் உத்திரவின்படி கும்பகோணம் காலேஜில் நடந்து வரும் சர்விஸ் கமிஷன் பரீக்ஷைக்கு ஆஜராகி, எழுதும்படியான அத்தாட்சிக் கடிதம் சென்ற செப்டம்பர் மாதம் 29ந் தேதி கிடைத்துள்ளதைக் கொண்டு பரீக்ஷை எழுதச் சென்றேன்.

என் கிராமம் கும்பகோணத்தில் இருந்து சுமார் 18 மைல் தூரத்தில், பஸ், ரயில் இவைகளுடைய உதவியில்லாமலேயே வரும்படியான இடத்தில், கொள்ளிடத்தைத் தாண்டிக் கொண்டு வரும்படியாக இருக்கிறது. இவ்வளவு கஷ்டப்பட்டுப் பரீக்ஷை எழுதவேண்டும் என்ற அவா மிகுதியினாலும் உத்தியோகம் பெற வேண்டும் என்ற எண்ணத்தாலும் செவ்வாயன்று தபால்களைப் பார்த்துக் கொண்டு சைக்கிளில் இரவு சுமார் 9 மணிக்குக் கும்பகோணம் அடைந்தேன். 6-ந் தேதி புதன் கிழமை பரீக்ஷை ஆரம்பமாவதற்கு முன்னால் காலேஜை அடைந்தேன். ஆனால் என் 2550 ஏ. என்ற இலக்கமுள்ள மேஜையும் பெஞ்சியும் அப்புறப்படுத்தப் பட்டிருந்தன. உடனே தலைமை மேற்பார்வையாளர் (Chief Supdt.) அவர்களை அனுமதிக் காரணத்தை வினவ 'என்னை அனுமதிக்கக் கூடாது' என்று சென்னை சர்விஸ் கமிஷன் காரியதரிசியிடமிருந்து உத்தரவு வந்திருப்பதாகக் கூறினார். அந்த மேற்பார்வையாளரைக் கடிதத்தைக் காட்டும்படிக் கேட்டேன். கடிதத்தில் '2550 A ஸ்ரீ என். நாகராஜன் என்பவரை பரீக்ஷை எழுத அனுமதிக்கக்கூடாது' என்று எழுதியிருந்ததைத் தவிர எக்காரணத்தால் என்பது கொஞ்சமேனும் தெரியப் படுத்தப்படவில்லை. உடனே ஓட்டத்தைத் தலைமைத் தபாலாபீசுக்குச் சென்று அவசரத் தந்தி.

பதிலுக்காகவும் பணம் கட்டிக் கொடுத்தேன். மறு நாள் காலை 7 மணி வரை பதில் தந்திக்காகக் காத்துக் கொண்டும் இருந்தேன். எவ்விதமான பதிலும் கிடைக்கவில்லை.

நான் பரீக்ஷைக்கு அனுமதிக்கப்படவில்லை என்ற விஷயத்தை என் வீட்டு விலாசத்திற்குத் தெரிவித்திருந்தால் நான் அனாவசியமாகப் பணத்தைச் செலவழித்துக் கொண்டு பரீக்ஷைக்காகப் போகவேண்டியிருந்திராதல்லவா?

எஸ். நாகராஜன்

விருதுநகர்
7—10—48

## கவனிக்க மறந்தது!

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

என் மகன் மூன்றும் வகுப்பில் படிக்கிறான். நேற்று வீட்டில் இராப்பாடம் படித்துக் கொண்டிருக்கும் பொழுது "ஏனப்பா! 'ஸ்டெப்ஸ்' புல்வெளியில் வசிக்கும் 'கிர்கிஸ்' சிறுவர் எப்படியப்பா இருப்பார்கள்?" எனத் துடுக்காய் வெடுக்கென ஒரு கேள்வி கேட்டான். "தெரியாதம்மா!" என்று சொல்ல மனம் வராமல் "எங்கே, நோட்டைக்கொடு பார்ப்போம்" எனக் கேட்டு வாங்கிப் படித்தேன். உலகப் படத்தை எடுத்து வந்து "ஸ்டெப்ஸ்" எங்கே இருக்கிறது என்று துருவித் துருவிப் பார்த்தேன். பார்த்தே விட்டேன். பார்த்துப் பலன் என்ன? எப்படித்தான் அந்த மத்திய ஆசியாவைக்காட்டி விளக்கிச் சொன்னாலும் என் மகனுக்குப் புரியவே இல்லை. அது மட்டுமா? லாப்புகள், பிக்மிகள், பாலஸ்தீன வாசிகள் என்றெல்லாம் பூகோளப் பாடங்கள் இருந்தன.

"குழந்தையின் மூளையைக் கெடுத்து விட்டார்கள்" என நினைத்துக் கொண்டிருக்கும் பொழுது எனது மற்றொரு மகன் இரண்டாம் வகுப்பில் படிக்கிறவன் "அப்பா! உங்களுக்கு எக்ஸிமோக்காரன் தெரியுமோ?" என இறுமாப்புடன் கேட்டான். "சரி நான் இந்தியப் பூகோளங்களை ஐரோப்பாவுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள் போலும்" என நினைத்துக் கொண்டு "தெரியுமே" என்று சொல்லித் துந்தரப் பிரதேசத்தைக் காட்டி அவனுக்கும் கற்பித்தேன். கற்பித்து என்ன பயன்? கனாக் கண்டது போலத் தான் அவர்களுக்கு இருந்தது.

உயர்தரப் பாடசாலைகளில் உற்ற கல்வி முறையைப் புகுத்திய சுதந்திர சர்க்கார் ஆரம்பப் பாடசாலைகளில் இந்த பூகோளத்தை ஒழித்துவிட்டுக் குழந்தைகளின் ஊர், சுற்றுப்பக்கம், தாலுக்கா, ஜில்லா, மாகாணம், தேசம் இப்படி வரிசைப்படி போதிக்க வேண்டிய பூகோளத்தைக் கவனிக்க மறந்தது விந்தையாக இருக்கிறது!

சி. பாதமுத்து

தியாகராயநகர்
10—10—48

## காலா காலத்தில் உதவலாகாதா?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

நான் S. S. L. C. பரீக்ஷை பாஸ் செய்து விட்டுத் தியாகராயநகரிலுள்ள ஸ்ரீ சாரதா வித்யாலயத்தில் செகண்டரி கிரேட் உபாத்தியாயினிக்காகப் பயிற்சி பெற்று வருகிறேன்.

என் தகப்பனார் சேலம் ஜில்லா காவேரிப் பட்டணத்தில் ஒரு பள்ளிக்கூட ஆசிரியர். என் தகப்பனாருக்கு ஒரு பெரிய குடும்பத்தை நடத்துவதே கஷ்டமாக இருக்கும் போது என் செலவுகளுக்கு எவ்வாறு பணம் கொடுத்துச் சமாளிக்க முடியும்?

ஆனால், இப்பயிற்சி பெறும் ஒவ்வொருவருக்கும் அரசாங்கத்தார் மாதா மாதம் ரூ. 18—0—0 ஸ்டைபெண்ட் (உதவிச் சம்பளம்) கொடுத்து வருவது யாவரும் அறிந்ததே. விலைவாசிகள் அதிகமாயிருக்கும் இக்காலத்தில் இத்தொகையை அதிகமாக்க வேண்டும் என்று ஒரு கிளர்ச்சியும் இருந்து வருகிறது. நான் சேர்ந்து நான்கு மாதங்கள் ஆகின்றன. இன்னும் அந்த உதவிப்பணம் எங்களுக்குக் கிடைக்கவில்லை. எனக்குக் குறைந்தது மாதம் ரூ. 25 செலவு ஆகிறது. இதை எனக்கு அனுப்ப என் தகப்பனார் என்னென்ன முக்கியக் குடும்பத் தேவைகளைக் குறைத்துக் கொள்கிறாரோ, அறியேன். என் போன்ற நிலைமையில் இன்னும் பல பெண்கள் இருக்கிறார்கள்.

பெண்களுக்குரிய உதவிச் சம்பளத்தைக் காலா காலத்தில் அளித்து உதவலாகாதா?

ஆர். லலிதா

மதுரை
10—10—48

## மக்களின் கடமை

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு

இம்மாதம் 9ம் தேதி இந்நகரில் நடந்த கோர தீ விபத்து காரணமாகத் தெக்காலம் என்னும் இடத்தில் சுமார் முந்நூறு கூரை வீடுகள் சாம்பலாயின. அவ்விடமிருந்தவர்களனைவரும் ஏழை மக்களே. ஏதோ காரணத்தினால் தீவிபத்து ஏற்பட்டுச் சுமார் ஆயிரத்துக்கு மேல் மக்கள் வீடின்றித் தவிப்பதுடன், பொருட்சேதமும் அதிகமாக ஏற்பட்டு விட்டது. தீ அணைக்கும் வண்டிகள் எவ்வளவோ முயற்சித்தும் பயனில்லாமல் போய் விட்டது. இதற்குக் காரணம் அந்த வண்டிகள் அந்த இடத்திற்குள் பிரவேசிக்க முடியாமற்போனது தான். அந்த இடத்தில் ஆட்கள் கூடச் சரிவரப் போக முடியாத சந்



ஒருவர்:—என் சுவாமி! இந்த பாங்கில் கணக்கு வைத்துக்கொள்ள வேண்டாம் என்கிறீர்கள்?

மற்றவர்:—அட! இந்த பாங்கின் செக் புஸ்தகம் ஒரே அடியாக ஊறும் ஐயா! திருவொற்றியூர் பாங்கின் செக் புஸ்தகம் வழவழ வென்று எவ்வளவு நன்றாயிருக்கிறது தெரியுமா!

ஆகள் தான் இருந்தன. பெரிய ரஸ்தாக்கள் கிடையாது. இந்த இடத்தைச் சரிப்படுத்தி அங்குள்ள மக்களுக்கு வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமென்று மதுரை நகரசபையார் செய்து வந்த முயற்சிகளெல்லாம் வீணாயின. மக்கள் நகரசபையின் நல்ல நோக்கத்தையும் காரணத்தையும் சரிவர உணராமல் தடுத்து வந்ததின் காரணமாக, இப்பொழுது இப்படி ஆபத்துக் காலத்தில் நகரசபையின் நெருப்பணைக்கும் வண்டிகள் கூட அவ்விடம் செல்ல முடியவில்லை.

இவ்விதமான பொதுக்காரியங்களில் பொது மக்கள் இனியாயினும் முட்டுக்கட்டை போடாமலிருப்பார்களா?

எஸ். வி. கௌளிகார்

கும்பகோணம்
6—10—48

### உதவி புரிவார்களா?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

நான் புனித நகர் குடந்தையின் புனித மகாமகக் குளத்தின் மேல்கரை வாசி. இக் குளத்தின் பழைய மேன்மைகளையும் சிறப்புக்களையும் சித்தரிக்க நான் விரும்பவில்லை. ஆனால் நாள்தோறும் இக்குளத்தில் உண்டாகும் அசுத்தங்களும், பாசிகளும் ஒன்று கூடி வெய்யிலில் காய்ந்து, விகார நிறத்துடன் மிதந்து காற்றுவாக்கில் ஒரு புறம் ஒதுங்குகிறது. நாளடைவில் அப்பாசியழுக்குகள் நாற்றமெடுத்து அருவருப்பான துர்நாற்றத்தை அள்ளி வீசி, அனைவரையும் மூக்கு முக்காட வைத்து, தேக சுகத்தையும் கெடுத்து வருகிறது. இவ்விஷயமாக இவ்வூர் முனிசிபாலிடி எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் பாராமுகமாய் இருப்பது மிகவும் வருந்தத் தக்கது.

முன் காலத்தில் அருகில் உள்ள அரசலாற்றிலிருந்து வெட்டப் பட்ட வாய்க்காலின் தோற்றம் சிறிது காணப்படுகிறது. இப்பொழுது அது தூர்ந்து கிடக்கிறது. இதைச் சீர்திருத்திக் கட்டியமைக்கும் கைங்கர்யத்தைச் சர்க்கார் ஏற்றுக் கொண்டால் ஆண்டு தோறும் மக விழாவிற்குத் திரண்டு வரும் மக்களின் உடல்நலம் கெடாமல் இருக்க உதவி புரிந்தவர்கள் ஆவார்கள்.

வே. கிருஷ்ணமூர்த்தி

திருப்பத்தூர்
9—10—48

### மதுவும் மதமும்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

காந்திஜி, ராஜாஜி முதலிய மகான்களின் போதனையின் பயனால் மது அரக்கன் ஒருவாறு ஒழிந்தான். மக்கள் பூரண விடுதலை பெற்றனர். இம்மகத்தான சமயத்தில் கிறிஸ்தவ மதச் சடங்குகளுக்கு மது உபயோகிக்க 'பெர்மிட்' பெற்றுக்கொள்ள வேண்டுமென்று பத்திரிகையில் வெளியான செய்தியைப் படித்துத் திடுக்கிட்டேன்.

மது அருந்துவது கிறிஸ்தவ மதக் கோட்பாடுகளுக்குப் பகைமை. கிறிஸ்து பகவானின் உபதேசத்தைப் பின்பற்ற வேண்டுமெனில் மதுவை உபயோகிக்கலாகாது. மதச் சடங்குகளுக்குக் கிறிஸ்தவர் மது உபயோகிக்க வேண்டுமென்பது அம்மதத்திற்கே துரோகம் செய்வதாகும். கிறிஸ்து பகவான் தாம் மரிப்பதற்கு முந்திய தினம் தமது சீடர்களுக்குத் திராட்சைப் பழ ரஸம் கொடுத்தாரென்பது தான் வேத உண்மை. அவரைப் பின்பற்றி வரும் கிறிஸ்தவரும் திராட்சை ரஸமே உபயோகிக்க வேண்டியதன்றி லாகிரி சேர்ந்த 'ஒயினை' உபயோகிப்பது மகா பாபம்.

மதச் சடங்குகளுக்குத் திராட்சைப் பழங்களை வாங்கி அவற்றைப் பிழிந்து ரஸம் எடுத்துக்கொள்ள வேண்டும். ஆதலால் சர்க்கார் கிறிஸ்தவர்களுக்கு மதுபான பெர்மிட் கொடுப்பது மிகவும் தவறு. நான் ஒரு கிறிஸ்தவனாதலாலேயே மேற்படி உண்மையைத் துணிவுடன் எடுத்துச் சொல்ல முன் வந்ததோடு சர்க்காரையும் இதைக் கவனிக்கும்படி வேண்டிக் கொள்கிறேன்.

வி. ஜி. எஸ். டானியல்

குளித்தலை
7—10—48

### வேலியே மேய்ந்தால் ...!

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

பள்ளியில் உள்ள ஆசிரியர்கள் மாணவர்களுக்கு நல்லொழுக்கத்தையும், நன்னடத்தையும் தான் பயிற்றுவித்தற்குக் கடமைப் பட்டுள்ளார்கள். ஆனால் வேலியே பயிரை மேய்வதுபோல், ஆசிரியர்களே ஒழுக்கங் கெட்டு நடந்தால் என்ன செய்வது? சில பள்ளிக்கூடங்களில் உபாத்தியாயர்கள் தங்களுக்குரிய பள்ளியின் அறையில் 'புகைப் பிடித்தல்' முதலான துர்ச்செய்கைகளை 'நாகரீகம்' எனக் கருதிச் செய்கின்றனர். இது மாணவர்களின் நன்னடத்தையை எவ்வளவு பாதிக்கும் என்று சொல்லவும் வேண்டுமா?

ஆர். நாராயணன்.

சென்னை
5—10—48

### வெளியூரில் கஜானாக்கள்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

வெளியூர்களில் நம் சர்க்கார் கஜானாக்களில் பணங்கட்ட வருபவர்கள் காலை ஒன்பது மணியிலிருந்து மாலை மூன்று மணி வரை காத்திருக்க வேண்டியதாயிருக்கிறது. ஏழை விவசாயிகள், வியாபாரிகள், மாணவர்கள் முதலியோர் அங்கு பணம் கட்டுவதற்கென்று வந்து தம் காலத்தை வீணாக விரயம் செய்யும்படி ஆகிறது. உதாரணமாகக் கஜானா ஒரு குறிப்பிட்ட நேரத்திலிருந்து பணம் வசூலிக்க ஆரம்பிக்கிறது என்றால் அதற்கு அரை மணியோ, ஒரு மணியோ கழித்துத் தான் சாதாரணமாகச் சிறிய ஊர்களிலே வசூலிப்பவர், கஜானா ஆபீசர் முதலியவர்கள் வருகிறார்கள். இதன் நடுவில் அமாவாசை வந்து விட்டால் கிட்டத்தட்ட நடுப்பகலுக்கு மேல் தான் இந்தக் கஜானாக்கள் வேலை செய்ய ஆரம்பிக்கின்றன.

முதலிலே 'சலான் பாரம்' வாங்க ஏழையாயிருந்தால் அந்தக் குறிப்பிட்ட 'பியூனி'டம் ஏதாவது சில்லறை கொடுக்க வேண்டியிருக்கிறது. பின்பு அது ஒவ்வொரு ஆபீசராக மாறி, பின் பழைய ஆபீசரிடமே வந்து ரசீது கொடுக்கப் படுகிறது. கையெழுத்து இடுவதும் குறித்துக் கொள்வதும் தவிர இந்த ஆபீசர்கள் வேறெதுவும் செய்வதில்லை. இதற்கு ஏகப்பட்ட காலதாமதமாகிறது. இந்தக் குறையை சர்க்கார் நிவர்த்திக்குமா?

காசி. கிருஷ்ணஸ்வாமி

---

* இந்த இதழில் வெளியாகியிருக்கும் வட்டமேஜைக் கடிதங்களில் சைதாப்பேட்டை கி. ராஜகோபாலன் அவர்கள் எழுதியிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25 பரிசளிக்கப்பட்டது.



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்

டி.எஸ்.ஆர். கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாஸனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர் போனது. இது கூந்தலை கருகருவென்று நீண்டு வளரச் செய்வதோடன்றி, மூளைக்கு குளு குளுப்பையும், அலாதி சுறுசுறுப்பை அளிக்கிறது.






## டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.

மதராஸ் ஏஜண்டு:
புஷ்பவனம் ஸ்டோர்ஸ்
பைகிராப்ட்ஸ் ரோடு
திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் & பாலக்காடுக்கு ஏஜண்டு.
R. பாலபட்டாபி
( Estd. 1933 )
P. B. No. 182, கோயமுத்தூர்

# உங்கள் நரம்புகள்!

வலுவுள்ளதாக உறுதியுடன் இருக்க வேண்டும் — அதுவும், ஓய்வில்லாத உழைப்பும் ஒழியாத கவலையும் நிறைந்த தற்கால வாழ்க்கையில்

# அஸ்வான்

நீண்டகாலமாய் மனோபலமும் தேக திடனும் வியர்த்தமாகி யிருந்தாலும் ஈடு கொடுத்து போஷாக்கு அளிக்கக்கூடிய ஒரு உயர்ந்த டானிக்

இன்றே ஒரு பாட்டில் வாங்குங்கள்
எப்போதும் கையிருப்பாய் வைத்திருங்கள்




சிறியோர்
•
முதியோர்
•
நோயாளிகள்
யாவருக்கும்
உகந்தது.

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா :: பம்பாய்

ஏஜண்டுகள்:
என். தேசாய் கௌண்டர் & கோ.,
41, பந்தர் தெரு :: மதராஸ்



## அவளுடைய பொக்கிஷம்

பண்டிட் டி. கோபாலாசார்லுவின்

# அருணா

கர்ப்பாசயரோக நிவாரணி

**ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட், மதராஸ் 17.**

---

# படை

## பறந்து போகும்



சரும வியாதிக்கு சீக்கிரம் குணம் காண "சைபால்" மேல் பூசுங்கள். மற்ற இடங்களுக்குப் பரவாமல் தடுப்பதுடன், சருமத்தை சுத்தப்படுத்தும். கொப்புளங்கள், சொரி, சிரங்கு, படை, பரு, கடி, கால் வெடிப்பு, புண்களுக்கு ஆச்சரியமாய் குணமளிக்கவல்ல மருந்து.

**CIBOL**

சைபால்

தயாரிப்பவர்கள்:

ஸௌத் இந்தியன்
மான்யுபாக்சரிங் கம்பெனி
மதுரை.

T.M.

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ் ஏஜென்ஸீஸ், பெஜவாடா: ஸ்ரீ கிரிஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி: மெஸர்ஸ். ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# தீபாவளிக்கு விசேஷ மலிவு விற்பனை

அலங்கார ஆடைகள்! ஆறாயிரம் ரகங்கள்!!

## பட்டுச் சேலைகள் - 2000 டிசைன்கள்

**விலை ரூ. 15 முதல் 750 வரை**

பெனாரஸ், பெங்களூர், கொள்ளேகாலம், ஆரணி, காஞ்சிபுரம் பட்டுச் சேலைகள், பெங்கால் சில்க் சேலைகள், மைசூர் கிரேப், ஜார்ஜெட், டிஷ்யூ சில்க் சேலைகள், கேவா, ஜங்ளா, டார்பான், ஜரிகை சேலைகள் முதலியன. கண்கவர் கலர்களில் அழகிய முந்திகள், அற்புதமான பார்டர்களுடன், தீபாவளிக்கு ஸ்பெஷலாக 5 முதல் 10 கெஜங்களில், தயார் செய்து மலிந்த விலையில் ஏராளமாக கொண்டுவந்து குவித்துள்ளோம்.

## நூல் சேலைகள் - 3000 டிசைன்கள்

**விலை ரூ. 5 முதல் 60 வரை**

தீபாவளிக்காக கோயமுத்தூர், உறையூர், மதுரை, சேலம், ஜம்மல்மடுகு, புல்லம்பட், தென்காசி, காஞ்சிபுரம், ஆரணி, நூல் சேலைகள் 100 நெ. 80 நெ. 60 நெ. நூல்களில் சாயத்துக்கு உத்திரவாதத்துடன், திறமைவாய்ந்த நெசவாளர்களால் ஸ்பெஷலாக 5 முதல் 10 கெஜங்களில் நெசவு செய்து கொண்டுவந்து குவித்துள்ளோம்.

## பட்டு, நூல் வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள் - 1000 டிசைன்கள்

**விலை ரூ. 2 முதல் 100 வரை**

வெண்பட்டு வேஷ்டிகள், பட்டு அங்கவஸ்திரங்கள், 100 நெ. துகிலி, மதுரை, சேலம், நாருயணவரம், நகரி வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள், டவல்கள் நவீன டிசைன்களில் கொண்டு வந்து குவித்துள்ளோம்.

## மில் ஜவுளிகள் - பல நூறு டிசைன்கள்

கட்டாவ் வ[illegible]ல்கள், சீட்டிகள், பின்லே வேஷ்டிகள், உயர்தர மல்கள் நவீன டிசைன்களில் கோட்டிங், ஷர்டிங் டுவில்கள், டவல்கள் இன்னும் பல ரகங்கள். தீபாவளியை முன்னிட்டு எல்லா விலைகளும் குறைக்கப்பட்டிருக்கின்றன.

**மலிந்த விலைகள் — கறார் விலை**

# கஸ்தூரிபாய் கம்பெனி

உயர்தர பட்டு நூல் ஜவுளி வியாபாரிகள்

மேல வீதி :: சிதம்பரம்

REGD. No. M. 4392